Regd. No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன்—298

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

# SRI RAMANUJAN

*Mahamahimopadhyaya*
Editor:—P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM-3.

வருஷச் சந்தா ரூ. 10. ...யச் சந்தா ரூ. 100



பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார்எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாதுமில் குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய அவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1973 ஜூன்மீ வெளியீடு

# ஸ்ரீ ராமாநுஜன் 298



சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும்
வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்

| ஸம்புடம் 25 | ப்ரமாதீச ஹு ஆடிமீ<br>1973 ஜூன்மீ வெளியிடப்பட்டது | ஸஞ்சிகை 10 |
|---|---|---|


## பத்ராதிப ப்ரதிநிதிவிஜ்ஞாபனம்

ஜம்பூத்வீபே—பாரத வர்ஷே—பரதகண்டே ஜனிப்பதும், மானிடப்பிறவி பெறுவதும், அந்தணர் குலத்திலும் வைணவ வகுப்பிலும் பிறக்கப்பெறுவதும், அது தன்னிலும் ஆழ்வார் எம்பெருமானார் திருவடி ஸம்பந்தம் பெற்றாருடைய திருவம்சத்தில் தோன்றப்பெறுவதும், ஜன்மாந்தரஸஹஸ்ர நற்றவப்பயன் என்பதில் ஐயமில்லை. இதெல்லாம் பரமபாக்ய பரிபாக விசேஷம் என்னத் தட்டில்லை. இது தன்னிலும் ஆழ்வாராசார்யர்களின் திவ்யஸூக்திகளைப் போற்றும் குடியில் பிறப்பது அப்ரமேயபாக்ய பரிபாக விசேஷம் என்றால் மிகையாகாது. “தத்ரைவ சேபி சபலா: சலபீபவந்தி” என்று பட்டர் அருளிச்செய்ததற்கு இன்னார் இனையார் என்னும் வாசியில்லாமல் இலக்காகியொழிவது எம்பெருமானுடைய விஷமஸங்கல்ப நிபந்தனமாகும். நம்மாழ்வார் ஒருபதிகத்திற்குப் பலன்கூறுமிடத்து “வாழ்வர் வாழ்வெய்தி ஞாலம் புகழவே” என்று அருளிச் செய்கிறார். அங்ஙனம் வாழ்வதற்கு இட்டுப் பிறந்து வைத்தும் அந்த வாழ்க்கையை இழந்து சோசநீயர்களாக ஆகின்றவர்களைப்பற்றி நாம் என்ன சொல்லுவது!

இனி அடுத்த பக்கம் முதலாக வெளிவரும் பத்ராதிபஸ்வாமியின் ஸ்ரீஸூக்திகளை ஆஸ்திகர்கள் அனுபவித்து ஆனந்திப்பர்களாக. பட்டர் தமது ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் ஒரு அத்புதமான ஸ்ரீஸூக்தி எழுதுகிறார். “ந தே நிரஸநீயா: அபிது சோசநீயா:” என்பதாமது. அதே ரீதியில் சோசனீயர்களென்று விட்டொழிக்க வேண்டியவர்களையும் நமது பத்ராதிப ஸ்வாமி நிரஸிப்பது உலகம் தெளிவு பெறுவதற்கேயாகும்.

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.
ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ காஞ்சி ப்ரதிவாதிபயங்கரம் மஹாமஹோபாத்யாய
அண்ணங்கராசார்யர்
எழுதிய

# அக்நிஹோத்ர-கண்டகோத்தாரம்

## ச்லோகங்கள்.

(1) ப்ரஹ்மஸ்ரீபதபூஷிதம் அத்புதமிய மக்னிஹோத்ர தாதார்யம்,
நிர்மலஹ்ருதயம் கர்த்தும் நிர்மீயத ஏஷ கண்டகோத்தார:.

(2) ஸ்வாதிகார விபரீத பத்ததௌ அக்னிஹோத்ர ஸுஹ்ருதேஷு ஸஞ்சரந்,
சோசநீயகதிமாப்தவாநிதி ப்ரேமபூமவிவசேந சோச்யதே.

(3) "சோகக்ஷோபே ச ஹ்ருதயம் ப்ரலாபைரேவ தார்யதே",
இத்யுக்திசிந்தநேநைவ ப்ரவர்த்தேஸ்மிந் விலேகநே.

## முன்னுரை.

ஸ்ரீ ராமாநுஜன் சென்ற இதழில் (296—297) பக்கம் 8-ல் 'புநர்வஸு பத்ரிகையைப்பற்றி' என்ற தலைப்பில் வெளிவந்த கடிதத்தையும் அதன்கீழ் நம்முடைய குறிப்பையும் அன்பர்கள் வாசித்திருப்பீர்கள். அதை மீண்டும் ஒருமுறை வாசித்துவிட்டு இந்த கண்டகோத்தார நூலை வாசிக்கவேண்டுகிறோம்.

ப்ரஹ்மஸ்ரீ அக்னிஹோத்ரம் ராமாநுஜ தாதாசாரியரவர்கள் திருப்பாவையைப்பற்றியும் அதன் வியாக்கியானங்களைப்பற்றியும் எழுதியிருப்பவற்றை அநுவாதம் செய்தாலும் மஹாபாதகமாகும். ஒவ்வொருவரியிலும் அர்த்ததோஷங்கள் தவிர சப்ததோஷங்கள் மிகமிகக் கொண்ட அக்கட்டுரையைப் பொருள்படுத்தி நாம் விடையிறுப்பது சிறிதும் தகாது. ஆயினும் தென்கலையார் வடகலையார் என்கிற வாசியற ஸ்ரீவைஷ்ணவ வுலகம் முழுவதும் வருந்தும்படியான வாசகங்களை வாரியிறைத்து நிரப்பியுள்ள அக்கட்டுரையை நாம் உபேக்ஷித்திருக்ககில்லாமல் இந்த மறுப்பு நூலை வைணவ வுலகுக்கு அரிய பெரிய விருந்தாக அளிக்கின்றோம். விஸ்தர பீதியையும் ஸம்க்ஷேபருசியையும் விட்டு எழுதவெழுந்திருக்கிறோம்.

முந்துற முன்னம் ஒன்று தெரிவிக்கவேண்டுவது அவசியமாகிறது. 16-12-65ல் வெளிவந்த தினமணியில் இந்த ப்ரஹ்மஸ்ரீ ஐயங்கார் பேசினபேச்சொன்று வெளியிடப்பட்டிருந்தது. அப்போது நாம் உபந்யாஸ சதத்வயம் என்னும் நூலெழுதி வெளியிட்டுக்கொண்டிருந்தோம். இவருடைய அஸங்கதமான அப்பேச்சை மறுத்து அந்த உபந்யாஸ சதத்வயத்தில் 165, 166 ஆகிய இரண்டு உபந்யாஸங்களை ஸ்ரீராமாநுஜன் 208ம் இதழில் வெளியிட்டிருக்கிறோம். அவற்றை அன்பர்களுக்கு இங்கு உபஹரிக்கவேண்டுவது மிகவும் அவசியமாகிறது. அவை வருமாறு:—

(உபந்யாஸ சதத்வயம்—இரண்டாம் பகுதி)

## 165. மும்மூர்த்திகளுக்கு மேலான மூலசக்தி விமர்சோபந்யாஸம்

உலகில் மனிதர்களும் பலவகைப்பட்டவர்கள். மனிதர்களின் மதங்களும் பல வகைப்பட்டவை. மதம் என்கிற வடசொல்லுக்குச் சரியான தமிழ்ச்சொல் 'கொள்கை' என்பது. தாவரங்களாயும் மிருகங்களாயும் பறவைகளாயும் பிறவாமல் மனிதர்களாய்ப்பிறந்தவர் ஒவ்வொருவரும் ஒவ்வொருவிதமான கொள்கையைக் கொள்ள உரிமையுடையவர்களே. ஆனால் ஸமுதாயக் கொள்கையென்பது தான் மதமென வழங்கப்பெறும். வைணவ மதம், சைவ மதம், த்வைத மதம், அத்வைத மதம், வல்லப மதம் என வழங்கப்பெறும் மதங்கள் பலவும் ஒருசில நபர்களைச் சேர்ந்ததல்லாமல் ஒரு பெருந்திரளைச் சேர்ந்தவையாய் நாடெங்கும் நகரமெங்கும் உலகமெங்கும் பரவியுள்ளன வென்பது உலக முற்று முணர்ந்ததேயாம். அந்தந்த மதங்களில் பிறந்தவர்கள் தத்தம் மதப்ரவர்த்தகர்களான ஆசார்யர்களிடத்தில் மெய்யன்பு பூண்டிருக்கக் கடமைப்பட்டவர்களாதலால் அப்பேராசிரியர்கள் காட்டிய வழியைப் பின்பற்றி முறை வழுவாது பேசவும் எழுதவும் உபதேசம் செய்யவும் ப்ராப்தம். இது பொது விதி.

ஆனால் தங்களுடைய மதம் தவறென்றும் மூல புருஷர் கொண்ட கொள்கை பொருத்தமற்றதென்றும் சில மேதாவிகளுக்குத் தோன்றவும் கூடும். இது அஸம்பாவிதமன்று. அன்னவர்கள் தங்களுடைய மதப்ரவர்த்தகர்கள் காட்டின வழியைவிட்டு விலகி அவர்களின் வாக்குக்கு முரணாகப் பேசவோ எழுதவோ நேர்ந்தால் அதை யாரும் தடுக்க முடியாதுதான். ஆனால் அவர்கள் செய்யவேண்டியதென்னவென்றால் ஸ்வமதப்ரவர்த்தகர்களான பேராசிரியர்களின் கொள்கைகளை மறுத்தோ மறைத்தோ தாங்கள் வேறான வொரு கொள்கையைப் பரப்பும்போது தகுந்த பிரமாணங்களை நன்கு நிரூபித்துத் தமது கொள்கையை நிலைநாட்ட வேண்டும். அப்படியல்லாமல் ஒரு பிரமாணமும் காட்டாமல் மனம்போனபடியும் மதிபோனபடியும் பேசுவதும் எழுதுவதும் செய்தால் "இவர்கள் பித்தர்கள்" என்றல்லது வேறு சொல்லவொண்ணாது.

16—12—65 தேதியன்று வெளிவந்த தினமணி பத்திரிகையில், இந்த ஐயங்கார் த்ரிமூர்த்தி தத்துவத்தைப்பற்றிப் பேசின பேச்சு பிரசுரம் செய்யப்பட்டிருக்கின்றது. எங்ஙனே யென்னில்;

"படைத்தல் காத்தல் அழித்தல் என்ற முத்தொழில்களை நடத்தும் மும்மூர்த்திகளும் தங்களுக்கு மேலான மூலசக்தியின் கட்டளையை நிறைவேற்றுபவர்களே. அந்த மூல சக்தியைத்தான் சைவர்கள் சிவன் என்றும் வைணவர்கள் விஷ்ணு வென்றும் அழைக்கின்றனர். எந்தப் பெயர் வைத்து அழைத்தாலும் ஒன்று தான்".

என்று ஐயங்கார் பேசினதாகவுள்ளது. இத்தகைய கொள்கை சில வகுப்பினர்க்கு உண்டென்றுகொள்வோம். இந்த வாதத்தை ஸ்ரீவைஷ்ணவாசாரியர்கள் எடுத்துக்கொண்

தொழித்திருக்க, ஸ்ரீவைஷ்ணவ மரபில் வருமொருவர்—ஸ்ரீமந்நாதமுனிகளின் பரம்பரையைச் சேர்ந்தவராகவும் சொல்லிக் கொள்ளுமொருவர் அந்த ஸ்ரீவைஷ்ணவ பரமாசாரியர்களின் திருவுள்ளம் கன்றும்படி பேசுவது பொருத்த முடைய தாகுமா?

ஸ்ரீவைஷ்ணவாசாரியர்களின் கொள்கை யென்பது கிடக்கட்டும், வேத வேதாந்த ஸித்தாந்த மென்னவென்று பார்ப்போம். த்ரிமூர்த்திகளுக்கும் மேலான வொரு சக்தியிருப்பதாகவும் அந்த சக்திக்குக் கட்டுப்பட்டு மும்மூர்த்திகள் தத்தம் தொழிலை நிறைவேற்றி வருவதாகவும் எந்த வேதத்திலாவது உபநிஷத்திலாவது ஓதியிருப்பதுண்டோ? "யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே" இத்யாதிகளான உபநிஷத்துக்களும், அவற்றையடியொற்றிய *ஜந்மாத்யஸ்ய யத: *என்கிற ப்ரஹ்ம ஸூத்ரமும் தத்பாஷ்யாதிகளும் இந்த விபரீதக் கொள்கைக்கு இறையேனும் இடந்தருமோ? *பீஷாஸ்மாத் வாத: பவதே* என்று தொடங்கியுள்ள உபநிஷத்வாக்ய மானது மும்மூர்த்திகளும் பராசக்திக்குக் கட்டுப்பட்டு அஞ்சி நடுங்கி வேலை செய்வ தாகவா சொல்லுகிறது? *அகில புவந ஜந்மஸ்தேமபங்காதிலீலே* என்கிற விசேஷ ணம் ஸ்ரீமந்நாராயண னொருவனுக்குத்தவிர இன்னொருவ்யக்தியிடத்தில் ஸமந்வித மாகுமென்று ஒரு ஸ்ரீவைஷ்ணவர் நினைப்பதுண்டா? ஸ்ரீவைஷ்ணவாசாரியர்களுக் கெல்லாம் வழிகாட்டியான ஆளவந்தார் தமது ஸ்தோத்ர ரத்னத்தில் (ச்லோ-11.) *ஸ்வாபாவிகா நவதிகாதிசயேசித்ர்த்வம் நாராயண! த்வயி ந ம்ருஷ்யதிவைதிக: க:? ப்ரஹ்மா சிவச்சதமக: பரமஸ்ஸ்வராடிதி ஏதேபி யஸ்ய மஹிமார்ணவ விப்ருஷஸ்தே* என்றருளிச்செய்துள்ள ஸ்ரீஸூக்தியொன்றுபோதும் வைதிகர்கள் தெளிவு பெற. நாராயணனுடைய ஐச்வர்யமானது ஸ்வாபாவிகமென்றும் [அதாவது அந்யாதீநமல்றென்றும்] அநவதிகாதிசயமென்றும் இதில் கண்டோக்தம். *பதிம் விச்வஸ்யாத்மேச்வரம்* ப்ரசாஸிதாரம் ஸர்வேஷாம்* மத்த: பரதரம் நாந்யத்* இத்யாதி அபரிமித ப்ரமாணங்களினால் ஸர்வோத்துங்க தத்வமாகச் சொல்லப்படுகிற நாராயணனுக்கும் நியாமகவஸ்து ஒன்றிருப்பதாக ஒரு ஸ்ரீவைஷ்ணவர் எழுதுவது மஹத்தான ஸாஹஸம். *ந தஸ்யேசே கச்சந தஸ்ய நாம மஹத்யச:* என்கிற உபநிஷத்வாக்யத்தில் தச்சப்த நிர்திஷ்டமான தேவதை எதுவென்று நினைத்திருக்கிறாரோ இவர்? *ஹிரண்யகர்ப்ப இத்யஷ்டௌ* என்று உபநிஷத்து காட்டுகிற எட்டு ருக்குக்களில் *பூதஸ்யஜாத: பதிரேகஆஸீத்* என்றும் *யஸ்யவிச்வ உபாஸதேப்ரசிஷம்* என்றும், ஸர்வநியந்தாவாக ஓதப்படுகிற தேவன் "மேலான ஒரு மூலசக்தியின் கட்டளையை........." என்கிற ஐயங்காருடைய வாக்கியத்தில் மேலான மூலசக்தியாகக் குறிப்பிடும் வஸ்துவா?

ஆயிரம் வருஷங்களுக்கு முன்னே ஆளவந்தார் "நாராயண! த்வயி நம்ருஷ்யதி வைதிக: க:?" என்று கேட்டிருந்ததற்கு "அஹமஸ்மி அம்ருஷ்யந் வைஷ்ணவோ வைதிக:" என்று விடையிறுக்க இவ்வையங்கார் இன்று தோன்றினர் போலும்! நாராயணனை அர்ணவமாகவும் மற்றையோர்களை சீகரமாகவும் வைத்துப் பேசியுள்ள ஆளவந்தாரைப் போற்றுங்குடியிலே பிறந்தவர்கள் 'நாராயணனும் சீகரமே; வேறேயொரு அர்ணவமிருக்கின்றது என்று பேசுவது ஜன்மாந்தரஸஹஸ்ர பாப பலமேயாகும்! மேலும் எழுதியுள்ள வார்த்தையும் அநந்விதம். ஸ்ரீரங்கநாத

னுடைய திருநாபிக்கமலத்தை வருணித்தருளிச் செய்யாநின்ற பட்டர் ஸ்ரீரங்கராஜ ஸ்தவத்தில்,

"த்ரயோ தேவாஸ் துல்யாஸ் த்ரிதயமித மத்வைதமதிகம்
த்ரிகாதஸ்மாத் தத்வம் பரமிதி விதர்க்காந் விகடயந்,
விபோர் நாபீபத்மோ விதிசிவநிதாநம் பகவதஸ்
ததந்யத் ப்ரூபங்கீபரவதிதி ஸித்தாந்தயதி ந:"

என்கிற சுலோகத்தினால் வெளியிட்டருளின அர்த்தம் மிகச்சீரியது. இதன் பொருளைச் சிறிது விவரிக்கிறேன்.

[த்ரயோ தேவா: துல்யா:] அரி அயன் அரனென்னும் மூன்று தெய்வங்களுக்கும் ஸாம்யஞ்சொல்லுவர் சிலர். [த்ரிதயம் இதம் அத்வைதம்] இம்மூன்று தெய்வங்களும் வெவ்வேறல்ல, ஒன்றே யென்பர் சிலர். கீழே சொன்னது த்ரிமூர்த்தி ஸாம்யவாதம்; இது த்ரிமூர்த்யைக்யவாதம்.

வஸ்துக்களின் பேதத்தை யொப்புக்கொண்டு அவற்றுக்கு ஏற்றத்தாழ்வுகளில்லாமை சொல்லுவது ஸாம்யவாத மெனப்படும். வஸ்துக்களுக்கு பேதத்தையே ஒப்புக்கொள்ளாமை ஐக்யவாத மெனப்படும்.

[அதிகம் த்ரிகாதஸ்மாத் தத்வம் பரம்] இம்மூன்று தெய்வங்களிற் காட்டிலும் மேற்பட்டதான துரீய ப்ரஹ்மமே பரதத்துவமென்று உத்தீர்ணவாதம் பண்ணுவர் சிலர். [இதி விதர்க்காந் விகடயந் விபோ: நாபீபத்ம: இத்யாதி.] இத்தகைய விதர்க்கங்களை யெல்லாம் அடியறுக்கின்ற திருநாபிக் கமலமானது ப்ரஹ்மருத்ரர்களுக்கும் முதற்கிழங்காயிருந்துகொண்டு உலகமெல்லாம் ஸ்ரீமந் நாராயணனுடைய புருவ நெறிப்புக்குப் பரவசப்பட்டதென்கிற ஸித்தாந்தத்தை நமக்கு நன்கு தெரிவிக்கின்றது என்றதாயிற்று.

நம்மாழ்வார் பெரிய திருவந்தாதியில் (72) *முதலாந் திருவுருவம் மூன்றென்பர், ஒன்றே முதலாகும் மூன்றுக்குமென்பர் முதல்வா! நிகரிலது காருருவா! நின்கத்ததன்றே, புகரிலகுதாமரையின்பூ.* என்று அருளிச் செய்துள்ள பாசுரத்தையே பட்டர் இந்த ச்லோகரத்னத்தினால் வியாக்கியானித்தருளினர். அடியேனுடைய பெரிய திருவந்தாதி திவ்யார்த்த தீபிகையிலும் ஸ்ரீரங்கராஜஸ்தவ வியாக்யானத்திலும் இதை விசதமாகக் காண்க. இவ் வுபந்யாஸத்திற்குச் சிகரமான விஷயம் அடுத்த உபந்யாஸத்தில் காணத்தக்கது.

## 166 கீதாபாஷ்ய தாத்பர்ய சந்த்ரிகா விசேஷோபந்யாஸம்

கீழுபந்யாஸத்தின் அநுபந்தமாகவே இவ்வுபந்யாஸம் எழுகின்றது. ஸ்ரீமந்நாராயண மூர்த்திக்கு மேலாக மூலசக்தியிருப்பதாகவும், அதன் கட்டளையை நிறைவேற்றுவதே நாராயணனுடையவும் பணியென்பதாகவும் ஒரு பிரமாணத்திற்கும் கட்டுப்படாமல் ஸ்வச்சந்தமாகப்பேசின இந்த ஐயங்காருடைய குத்ஸி

தவாதம் கீழுபந்யாஸத்தில் அடியறுக்கப்பட்டது. அந்த துர்வார்த்தையை ஸ்ரீமந் நிகமாந்த மஹாகுருவும் அடியறுத்திருப்பது இங்குக் காட்டப்படுகின்றது. அப்பேராசிரியர் தமது நூல்களில் பலவிடங்களில் அந்த வாதத்தைக் கண்டித்திருந்தாலும் கீதா பாஷ்ய தாத்பர்ய சந்த்ரிகையில் முக்கியமானவோரிடம் எடுத்துக்காட்டப்படுகிறதிங்கு.

கீதையில் பத்தாமத்யாயத்தில் (ச்லோ-11) ''பரம் ப்ரஹ்ம பரம் தாம பவித்ரம் பரமம் பவாந்'' என்பது அர்ஜுனனுடையவார்த்தை. அவ்விடத்தில் பாஷ்யத்தில் "நாராயண பரம் ப்ரஹ்ம தத்வம் நாராயண: பர:, நாராயணபரோ ஜ்யோதிராத்மா நாராயண: பர:* இதி ஹி ச்ருதயோவதந்தி'' என்று முடிக்கப்பட்டது. இதை விவரிக்கப் புகுந்த தாத்பர்ய சந்த்ரிகையில், (நாராயணபரம் ப்ரஹ்ம) என்றவிடத்திலும் (நாராயண பரோ ஜ்யோதி:) என்றவிடத்திலும் சிலர் நாராயணனுக்குப் பரமென்று பஞ்சமீதத்புருஷ ஸமாஸம்பண்ணி நாராயணனிற் காட்டிலும் மேம்பட்டதாக ஒனறிருப்பதாய் அபார்த்தம் செய்வதுண்டாகையாலே அதனை நிரஸிக்கத் திருவுள்ளம்பற்றின நிகமாந்தமஹாகுரு,

''.........நாராயணேதி. அநயோர் வாக்யயோ: ப்ரதமௌ நாராயண சப்தௌ லுப்தவிபக்திகௌ; *தத்வம் நாராயண: பர:* இத்யாதிஸஹபாடவசாத் வ்யஸ்தத்வம் ப்ரதமாந்தத்வஞ்ச ப்ராப்தம். ததைவ ஸவிபக்திகதயா ச்ருத்யந்தரே அதீயதே * நாராயண: பரம் ப்ரஹ்ம* இத்யாதி. ஏதேந பஞ்சமீஸமாஸதாம் வதந் பகவத் த்வேஷீ ப்ரத்யுக்த:; ஸர்வச்ருதி ஸ்ம்ருதிஸூத்ரந்யாய விரோதாச்ச'' என்றெழுதியுள்ளார். இதில் ''பகவத்த்வேஷி'' என்று விருது சாத்தப் பெற்ற மஹாநுபாவர் யாரோ! என்கிற ஸந்தேஹம் இப்போது தீர்ந்தது.

இந்த தாத்பர்ய சந்த்ரிகா ஸ்ரீஸூக்தியை யடியொற்றியே வேதாந்த கௌஸ்துபகாரர் ''......சாகாந்தரீய: ஸவிஸர்க்க: பாட: ச்வபசஸ்ய ஜிஹ்வாம் ச்சிநத்தி'' என்றெழுதிவைத்தார். (நாராயணபர:) என்ற ச்ருதியில் பஞ்சமீஸமாஸம் கொண்டுதானே நாராயணனுக்கும் மேற்பட்டதொன்று இருப்பதாகப் பேசவேண்டும், அந்தப் பேச்சு பல நூற்றுண்டுகட்கு முன்னமே அடியறுக்கப் பட்டிருக்க அது மீண்டும் இப்போது தலைகாட்டத் தொடங்கியதும் நன்மைக்காகவேயாயிற்று.

இவ்விரண்டு உபந்யாஸங்களும் 1966ல் எழுதப்பட்டவை என்பதை மீண்டும் நினைவூட்டுகிறோம்.

இவ்வையங்கார் தமது மனச்சாட்சியை மீறியும் தமது குலப்பெருமைக்கு முரணாகவும் எழுதுமவையும் பேசுமவையும் நமக்கு எட்டுகிறபோதெல்லாம் நாம் வாளாவிருந்திடாமல் வாஸ்தவமான சாஸ்த்ரார்த்தங்களை வெளியிட்டு இவருடைய துர்வாதங்களை மறுத்தே வருகிறோம். இவரை மறுப்பது நமக்கு உத்தேச்யமன்று. இவருடைய பாஷண்டபஷணங்களினால் கலங்கி வருந்தும் ஸாதுக்களைத் தெளிவிப்பதே நமக்கு ப்ரதானமான உத்தேச்யம்.

## முன்னுரை முற்றிற்று.

# ❋ இனி நூல் தொடக்கம்

(ச்லோகம்) குருகுலவிமுகாநாம் திவ்யஸூக்தௌ நிஸர்காத்
ப்ரபல விபுலமாத்ஸர்யாபிபூதாத்மநாஞ்ச
பஹுளதுரிதராசிப்ரேரிதம் வாக்யப்ருந்தம்
ரஸிகஹ்ருதய போக்யைர் வாக்விசேஷைர் துநோமி.

ஸ்வாமி எம்பெருமானார் ஸ்ரீபாஷ்யம் தொடங்கும்போது "ஸூத்ராக்ஷராணி வ்யாக்க்யாஸ்யந்தே" என்றருளிச் செய்தார். அதே ரீதியில் 'இந்த ப்ரஹ்மஸ்ரீயின் ஏகைகமப்யக்ஷரம் ப்ரத்யாக்க்யாயதே' என்று ப்ரதிஜ்ஞைசெய்து எழுதத் தொடங்குகின்றேன். இவருடைய சுவடி வரிதோறும் அபசப்தங்களைக் கொண்டதென்று முன்னுரையில் ப்ரஸ்தாவித்திருக்கிறேன். பலபல பதங்களின் ஸ்வரூபமே தெரிந்து கொள்ள முடியாமலிருக்கிறது. காத்யாயயனி, காத்யாயகி என்றிப்படி யெல்லா மெழுதியுள்ளார். "ஸ்வயமபி லிகிதம் ஸ்வயம் ந ஜாநாதி" யில் சேர்ந்தது முழுதும். இப்போதே நமது கையில் கிடைத்த ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனபத்ரிகையில் உள்ள ஒரு பாராவை மட்டுமிங்கு உதாஹரிக்கிறேன்.

"தாம் தமிழ்மொழியின் கருத்துக்களைக் கரைகண்டு விட்டதுபோலவும் அதைப் பண்டையுரையாசிரியர்கள் அறியாததுபோலவும் எழுதும் இவர் தமிழில் அரிச்சுவடி கூடச் சரியாகப் படித்தவரல்லர் என்பதை இவருடைய இக்கட்டுரையே விளக்குகிறது.......ஐந்து பக்கங்கொண்ட இக்கட்டுரையில் உண்மையில் பிழைகள் நூற்றுக்குமேலே இருக்கின்றன. இவர் ஸர்வஜ்ஞர்களும், பரம ரஸிகர்களும், பரமகாருணிகர்களுமான பெரியவாச்சான்பிள்ளை முதலானாரின் நூல்களில் நூற்றுக்குமேல் பிழையிருப்பதாகக் கைகூசாமல் எழுதுகிறார்! தமிழில் 'உரை' என்னும் பதத்துக்கும், 'உறை' என்னும் பதத்துக்கும் உள்ள வாசியைக் கூடத் தாம் அறியாதவர் என்பதைப் பலகால் பறைசாற்றிக்கொண்டிருக்கிறார். வ்யாக்யானம் என்னும் பொருளில் 'உரை' என்றே எழுதவேண்டும் என்றும், 'தலையணை உறை' முதலானவிடங்களில் மேலே மூடிக்கொண்டிருக்கும் பொருளைக் குறிக்கும்போதே 'உறை' என்று எழுதவேண்டும் என்றும் தமிழில் சிறிது அறிவுள்ளவர்கூட அறிவர். இவரோ "திருப்பாவை உறைகள்" என்று தலைப்பில் கொட்டையெழுத்தில் எழுதியதோடு நில்லாமல், கட்டுரையின் உள்ளே ஐந்து இடங்களில் 'உறை' என்றே எழுதுகின்றார். ஓரிடத்திலாவது 'உரை' என்று எழுதவில்லை. 'மடலூருகிறது ஒரு துரை. பாவை நூல் துரையில் கருத்தை வெளியிடுவது மற்றொரு துரை' என்று, துறைக்கும் துரைக்கும் உள்ள வாசியை அறியாமல் பலகால் எழுதுகிறார். ஓரிடத்தில்கூட 'துறை' என்று எழுதவில்லை. '(4) நோம்பு நூற்காமல் நூற்பதாக பொய் சொல்லுகிறாள்...நோம்பு நூற்கவுமில்லை; நூற்றேன் என்று சொல்லவுமில்லை...(11) ஆண்டாள் மடலூரவில்லை நோம்பு நூற்றாள்' என்று பலகால் எழுதுகிறார். நோன்பு நோற்றதாக ஓரிடத்தில்கூட எழுதவில்லை. இதிலிருந்து உரைக்கும் உறைக்கும், துறைக்கும் துரைக்கும் நோற்பதற்கும் நூற்பதற்கும் உள்ள வாசியைக்கூட அறியாதவர் இவர் என்று விளங்குகிறது. நூலை நூற்கலாம்; நோன்பை நோற்கலாமேயொழிய நூற்கமுடியாது என்பதைக்கூட அறியாத இவர்

தமிழைக் கரைகண்டவர்போலே மார்புதட்டிக்கொண்டு தென்மொழி வடமொழிக் கடல்களைக் கரைகண்ட மஹாசார்யர்களை நிந்திக்கப்புகுந்ததையும், அதை ஒரு பத்திரிகை அபத்தக் களஞ்சியமாக அச்சிடப்புகுந்ததையும் பார்க்கும்போது. இவர்களது மடமையை நினைத்து வருந்துவது தவிர வேறு செய்யலாவது ஒன்றுமில்லை". இந்த ப்ரஹ்மஸ்ரீ ஐயங்கார் அவலக்ஷணமாக எழுதியிருந்தாலும் நாம் ஸலக்ஷணமாகவே அநுவதிப்போம்.

"உம்முடைய கட்டுரையை உமது திருக்கையால் எழுதியனுப்பும்" என்று இவர்க்குத் தெரிவித்து அது கிடைத்த பின்பு நமது மறுப்பை எழுதலாமென்று உத்தேசித்தேன். அந்த மனோரதம் நிறைவேறுதென்று அந்த ஆசையை விட்டு இவருடைய கருத்துக்களைக் கண்டிக்கிறேன். "திருப்பாவை ஆராதன காலத்தில் மார்கழி மாதத்தில் பாடப்படுகிறது" என்றிவரடிக்கடி யெழுதுகிறார். இவர் ஆரம்பிக்கும் போதே 'அருளிச் செயல்' என்று தொடங்குகிறார். அந்த நிர்தேசம் பக்தி பூர்வகமாக விருந்தால் 'திருப்பாவை ஸேவிக்கப்படுகிறது' 'திருப்பாவை அனுஸந்திக்கப்படுகிறது' என்று இவர் கையில் வந்திருக்குமேயொழிய 'திருப்பாவை பாடப்படுகிறது என்று ஒரு வைஷ்ணவன் கையில் வராது. "யானுய்த் தன்னைத் தான் பாடி" என்றும் "தொல்பாவை பாடியருளவல்ல பல்வளையாய்" என்றும் "இன்னிசையால் பாடிக் கொடுத்தாள்" என்றும் செய்யுள்களில் இருந்தாலும் வ்யவஹார முறையில் 'திவ்யப்ரபந்தம் பாடுகிறார்கள்' என்று ஒரு வைஷ்ணவனும் பேசுவதில்லை. தேவாரம் பாடுகிற திரவில் பழக்கமே இவர்க்கு அதிகமாதலால் இங்ஙனே எழுதினார் போலும்! திருப்பாவைக்கு மார்கழி மாதத்தில் மட்டும் ஏற்றமன்று. ஒவ்வொரு நாளிலும் திருப்பாவைஸேவையில்லாத திருவாராதனமே கிடையாதென்பதை உலகமுணரும்.

## வேதமனைத்துக்கும் வித்தாகுங் கோதைதமிழ்

திருப்பாவையின் சிறப்பைத் தெரிவிக்கும் பாசுரங்கள் பல. அவற்றுள் இஃது ஒன்று.

(வெண்பா) "பாதகங்கள் தீர்க்கும் பரமனடி காட்டும்
வேதம் அனைத்துக்கும் வித்தாகும்—கோதை தமிழ்
ஐயைந்துமைந்தும் அறியாத மானிடரை
வையஞ்சுமப்பதும் வம்பு."

இப்பாசுரத்தில் "வேத மனைத்துக்கும் வித்தாகும்" என்னும் இந்த அடைமொழியானது இவ்வையங்காரை "ஸம்தாபயதி ஸ்வம் தேஹம் ஆபாத தலமஸ்தகம்" என்றாக்குகின்றதந்தோ! வேதம் அனைத்துக்கும் வித்தாகும் என்றதன் உண்மைப் பொருள் யாதெனின் கேண்மின்: வேதமனைத்துக்கும் வித்தென்று ப்ரணவத்தைச் சொல்லுகிறது. "ப்ரணவாத்ப்ரபாஸ் ததா வேதா:" என்றும் "ஓங்காரப்ரபவாவேதா:" என்றுமுள்ள பிரமாணங்களினால் ஓங்காரமான ப்ரணவமானது வேத மனைத்திற்கும் பீஜமாயிருப்பதென்பதில் ஐயமில்லை. அந்தப் ப்ரணவமானது எப்படி ஸகலார்த்தங்களையும் கொண்டதோ அப்படியே கோதை தமிழும் ஸகலார்த்தங்க

ளேயும் தன்னில் கொண்டது என்றபடி. ஆக, 'வேதமனைத்துக்கும் வித்தாகும்' என்றது ஸகல வேதங்களுக்கும் வித்தான ப்ரணவத்தை ஒத்தது திருப்பாவை என்றதாயிற்று. அன்றிக்கே திருப்பாவைதானே வேதமனைத்திற்கும் வித்தானது என்று பொருள் கொண்டாலும் குறையில்லை. வேதங்களில் தெளிவாகக் காணமுடியாத அர்த்தங்களைத் திருப்பாவை தெளிவு படுத்துகின்றது என்னுங்கருத்தைக் காட்டும் இவ்வதிசயோக்தி. வேதாந்தவாசிரியர் "செய்ய தமிழ்மாலைகள் நாம் தெளிய ஓதித் தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே" என்று பணித்தது இந்த வெண்பாவை உட்கொண்டேயாகும். தெளியாத மறைநிலங்கள் யாவை? அவற்றைத் தெளிவித்த செய்ய தமிழ்மாலைகள் யாவை? இத்யாதிகளை விமர்சித்து தெளிவு பெறுவதற்கோ பெறுவிப்பதற்கோ இந்த ப்ரஹ்மஸ்ரீ பிறந்தவரல்லர்.

## அடிப்படையான கருத்துக்களைப் பிரதிபலிக்கவில்லை

ப்ரஹ்மஸ்ரீ எழுதுகிறார் "ஆண்டாளின் இந்த அருளிச் செயல்களுக்குப் பல உரைகளிருந்தும் உரைகள் ஸம்ப்ரதாயார்த்த ப்ரகாசகமாக இருக்கின்றனவே தவிர அருளிச்செயலின் அடிப்படையான கருத்துக்களை ப்ரதிபலிக்கவில்லை" என்று. ஜரத்கவாதி வாக்யமென்று சொல்லுவதுண்டே அதுவே இது. "ப்ரதிபலிக்கவில்லை" என்பதற்கு என்ன அர்த்தம்? இங்கு எப்படி அந்வயம்? என்று கேட்டால் வானம் பார்ப்பர். அதுநிற்க. திவ்யப்ரபந்த வ்யாக்யானங்கள் ஸம்ப்ரதாயார்த்த ப்ரகாசகமென்று இசைகிறாரிவர். ஸம்ப்ரதாயார்த்த மென்றால் என்ன பொருள்? தேசிகன் தமது ந்யாஸ விம்சதியை "ஸித்தம் ஸத்ஸம்ப்ரதாயே" என்று தொடங்குகிறார். "பூர்வே பூர்வேப்யோ வச ஏததூசு:" (காடகச்ருதி) என்று வேதம் சொன்னபடி முன்னோர் மொழிந்த முறை தப்பாமல் கேட்டுப் பின்னோர் பேசும் பொருளே ஸம்ப்ரதாயார்த்த மெனப்படும். ஸ்ரீமந் நாதமுனிகள் தொடங்கி ஆசார்ய பரம்பரையில் போந்த அர்த்த விசேஷங்களே திவ்யப்ரபந்த வ்யாக்யானங்களில் ஏறியுள்ளனவென்பதை இவரிசைந்தாராயிற்று. இதற்குமேல் "அருளிச் செயலின் அடிப்படையான கருத்து" என்று ஒன்று எழுதுகின்றார். ஸகல சாஸ்த்ரங்களுக்கும் அடிப்படையான கருத்து எதுவோ அதுவேதான் அருளிச் செயல்களுக்கும் அடிப்படையான கருத்தாம். அந்தக் கருத்தை "ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோ ரூபம் ப்ராப்துச்ச ப்ரத்யகாத்மந:" இத்யாதி சுலோகங்களும் "மிக்க விறைநிலையும் மெய்யாமுயிர் நிலையும் தக்க நெறியும் தடையாகித்தொக்கியலும் ஊழ்வினையும் வாழ்வினையுமோதும் குருகையர்கோன் யாழினிசை வேதத்தியல்" என்பது முதலான ஸ்ரீஸூக்திகளும் தெரிவித்துள்ளன. இனி இவர் செய்ய வேண்டுவதாவது திவ்யப்ரபந்தவ்யாக்யானங்களில் அமைந்துள்ள ஸம்ப்ரதாயார்த்தங்கள் இன்னின்னவை, அமைய வேண்டிய அடிப்படையான பொருள்கள் இன்னின்னவை என்பதை விளக்க வேண்டியதேயாம். "ஸ்ரீ பாஷ்யத்தில் பூர்வபக்ஷஸித்தாந்தங்களும் ஸூத்ரார்த்தமும் இருக்கின்றனவேயன்றி வேதாந்தத்தின் அடிப்படையான கருத்து இல்லை" என்றும் இவர் எழுதலாம். இவையெல்லாம் பொருளற்ற பேச்சுக்கள்.

திவ்யப்ரபந்தங்கள் ஆழ்வார்களின் அநுபவ பரிவாஹரூபமானவை. ஒவ்வோராழ்வாருடைய அநுபவம் ஒவ்வொரு வகைப்பட்டது. இவ்வநுபவங்களுக்கு மூலகாரணம் பக்தியொன்றேயாகும். கூரத்தாழ்வான் நம்மாழ்வாரைப் பற்றி அருளிய ச்லோகமொன்று "பக்திப்ரபாவ டவதத்புத பாவபந்த ஸந்துக்ஷித ப்ரணய ஸார ரஸௌக பூர்ண: வேதார்த்த ரத்நநிதி: அச்யுத திவ்ய தாம ஜியாத் பராங்குச பயோதிரஸீமபூமா" என்பது. இது அவயவியான ஆழ்வாரைப் பற்றியதேயாகிலும் அவயவ பூதர்களான மற்றுள்ள ஆழ்வார்களுக்குமொக்கும். இந்த ச்லோகத்தில் ஒவ்வோரக்ஷரத்தையும் இந்த ப்ரஹ்மஸ்ரீ உற்று நோக்கினால் மிக்க தெளிவு பெறுவர். ஆனால் அந்த பாக்யமில்லையிவர்க்கு. கம்பர் என்று ப்ரஸித்தரான மஹாகவி சடகோபரந்தாதியில் "அந்தமிலா மறையாயிரத்தாழ்ந்த வ நம்பொருளைச் செந்தமிழாகத் திருத்திலனேல் நிலத்தேவர்களும் தந்தம் விழாவுமழகுமென்னும் தமிழார் கவியின் பந்தம் விழாவொழுகும் குருகூர் வந்த பண்ணவனே" என்று கூறியவொரு செய்யுள் இவருடைய நித்யாநுஸந்தானத்திற்குரியது.

இதற்குமேல் இவர் என்ன கூறுவரென்றால் "இப்போது திருப்பாவையைப் பற்றிய ப்ரஸ்தாவமேயொழிய திருவாய்மொழியைப் பற்றியோ மற்ற திவ்யப்ரபந்தங்களைப் பற்றியோ பேச்சில்லையே என்பர். ஸகல திவ்யப்ரபந்தங்களுக்கும் அடிப்படையான கருத்து ஒன்றேயென்பதை இவர் நன்குணரவேண்டும். "பூதம் ஸரச்ச மஹதாஹ்வய" இத்யாதி தனியன் அருளிச் செய்த பட்டர் "பக்தாங்க்ரிரேணு பரகால" என்றதற்குப்பிறகு "யதீந்த்ர மிச்ராந்" என்றருளிச் செய்து அதன்பிறகு "ஸ்ரீமத் பராங்குசமுநிப்" என்றருளிச் செய்ததன் மருமத்தை குருகுல விமுகரான விவர் எங்ஙனேயறிவர்?

## ப்ரஹ்மஸ்ரீயின் ப்ரலாப பரம்பரைகள்

எழுதுகிறாரிவர். "ஸமீப காலங்களில் திருப்பாவை உபந்யாஸங்களைத் தங்களிஷ்டப்படி திருப்பாவைக்குக் கருத்துகூறி குழப்பத்தை உண்டுபண்ணிவிட்டார்கள். இவர்கள் ஸ்வாபதேசம் தனிவழியில் நிற்கின்றது. திருப்பாவை காலக்ஷேபத்தை வியாஜமாகக் கொண்டு தங்களுக்குத் தோன்றியதை யெல்லாம் சொல்வது ஸஹஜமாகிவிட்டது. இந்நிலையில் திருப்பாவை உரையில் ஒரு புதுத் திருப்பம் ஏற்பட்டுதான் ஆகவேண்டும். இது ஒரு திருப்பாவையின் மறுமலர்ச்சி" என்று.

இந்த ப்ரலாபபரம்பரைகளிலுள்ள ஒவ்வோரக்ஷரமும் இவருடைய அடிவயிற்றின் கொதிப்பைக் காட்டுகின்றது. 'ஸமீபகாலங்களில்' என்பதற்கு என்ன அர்த்தம்? சில நாட்களாக, சில மாதங்களாக என்று விவக்ஷிதமா? அல்லது சில வருஷங்களாக என்று விவக்ஷிதமா? திருப்பாவை ப்ரவசநங்கள் நடைபெறுமிடங்களிலெல்லாம் சென்று இவர் செவிகொடுத்துக் கேட்டிருக்கின்றாரா? ஏறக்குறைய அறுபது வருஷங்களுக்கு முன்னே மார்கழி மாதந்தோறும் திருப்பாவையின் மூவாயிரப்படி, ஆறாயிரப்படி முதலிய வ்யாக்யானங்களைப் பெரியார்களிடம் காலக்ஷேப முறையில் ஸேவித்து வந்தார்கள். அந்த ப்ரக்ரியை அறவே மாறி உபந்யாஸங்கள் செய்வதென்கிற பத்ததி ஏற்பட்டது. சிலர் புத்தகங்கள் வைத்துக்கொண்டும் சிலர் கைக்

குறிப்புக்களை வைத்துக்கொண்டும், சிலர் தம் மனம்போனபடிக்கும் ப்ரவசநங்கள் செய்துவருவதுண்டு. இது சென்னையில் மட்டுமன்றிக்கே பலபல நகரங்களிலும் அக்ரஹாரங்களிலும் க்ராமங்களிலும் நடந்து வருகிறது. ஸ்ரீவைஷ்ணவர்கள் மட்டுமன்றிக்கே இதரர்களுங் கூட ஸ்வச்சந்தமாகத் திருப்பாவைப் பிரவசனங்களைச் செய்து போருகிறார்கள். அந்த ப்ரவசநங்களிலுள்ள குணதோஷங்களை யாரும் எடுத்துரைக்க முடியாது. ப்ரக்ருதத்தில் வ்யக்தி நிர்தேசமில்லாமல் இந்த ப்ரஹ்மஸ்ரீ கைபோனபடியெல்லாம் மேற்கண்டவிதமாக எழுதியிருப்பதானது அஸூயா ப்ரவாஹபரீவாஹமத்தனை. "குழப்பத்தை உண்டு பண்ணிவிட்டார்கள்" என்றெழுதுகிற இவரைக் கேட்கிறோம், 'யாருக்கு எவ்விதமான குழப்பம்?' என்று. இவர் ஸ்ரீவைஷ்ணவராகப் பிறந்திருந்தும் திருப்பாவையைக் கற்றறியார், தொட்டறியார், திருப்பாவை ஸேவிக்குமிடங்களுக்கும் சென்றறியார். இவர் ஆங்காங்குப் பேசும் ஸ்வச்சந்தப் பேச்சுக்களால் எவ்வளவோ குழப்பங்கள் உண்டாகியிருக்கலாம். இந்த நமது நூலின் தொடக்கத்தில் தினமணி பத்ரிகையைக் கொண்டு விவரித்திருக்கிற ஒரு விஷயம் எத்தனை மஹான்களுக்கு எவ்வளவு குழப்பத்தை உண்டாக்கியிருக்குமென்பது தெரியுமா? "நின்று சொல்லும்" என்று கேட்கிறேன். யார் யார் சொன்ன எந்த எந்த அர்த்தங்களால் எவ்வெவ்விதமான குழப்பம் யார் யாருக்கு உண்டாயிற்றென்று கேட்கிறேன். மடிபிடித்துக் கேட்கிறேன். இவர் எவ்வளவு அபத்த அஸம்பத்தங்களை எழுதியனுப்பினாலும் வெளியிட புநர்வஸு பத்ரிகை ஸித்தமாகவிருக்கிறது. அதிலேயே எழுதி வெளியிடட்டும். "திருப்பாவைப் பிரவசநங்களினால் உண்டான குழப்பம்" என்று மகுடமிட்டு விளக்கமாக எழுதவேண்டுமிவர். ப்ரவசநகர்த்தாக்களின் பெயரை எடுத்தெழுதக் கூசினாலும் "இன்னின்ன வார்த்தைகளினால் இன்னின்ன குழப்பம் ஏற்பட்டிருக்கிறது" என்றாவது இவர் எழுதியாகவேண்டும்.

## முக்கியமான வார்த்தையொன்று கேளீர்

இந்த ப்ரஹ்மஸ்ரீயின் அவலக்ஷணக் கட்டுரையில் பூர்வாசார்ய வ்யாக்யானங்களோடு நவீனர்களின் ப்ரஸங்கங்களோடு வாசியற யாவற்றுக்கும் பரிஹாஸங்களும் பரிவாதங்களும் செய்யப்பட்டுள்ளன. இன்ன க்ரந்தத்தில் இவ்விதமாக எழுதப்பட்டிருக்கிறது என்றோ, இன்னார் இவ்விதமாக ப்ரஸங்கம் செய்தார் என்றோ ஒரு வரியும் கிடையாது. இவருடைய கட்டுரை முழுதும் கண்டனக் கட்டுரையாகவுள்ளது. கண்டனம் செய்பவர்கள் சில வாக்கியங்களை அநுவாதம் செய்தேயாகவேண்டும். ஒன்றையும் அநுவதியாமல் பொதுப்பட எழுதிக்கொண்டுபோகிற இவருடைய வீண்பேச்சுக்களையும் பொருள்படுத்தி யெழுதுகிற நம்மை அடிக்கடி நொந்துகொள்ளுகிறோம்.

## ஜேம்ஷெட்பூர் ராமரத்னமையங்கார்

இரண்டு வருஷங்களுக்குமுன் மறைந்த இந்த ஐயங்கார் மஹாமேதாவி, பரமரஸிகர். மார்கழிமாதந்தோறும் டாடாநகரிலிருந்து சென்னைவந்து நம்மோடு

கூடவேயிருப்பார். இவர் ப்ரஹ்மஸ்ரீயின் தகப்பனாரிடம் ஸமாச்ரயணம் பெற்றவ ராம். ஒரு மார்கழி மாதத்தில் ப்ரஹ்மஸ்ரீ சென்னைவந்து சங்கர மடத்தில் திருப் பாவை ப்ரவசனம் செய்து வந்தாராம். அப்போது இவ்வையங்காரை ஓரிடத்தில் கண்டு நம் காலட்சேபத்திற்கு வரலாகாதா? என்று அழைத்தாராம். ஆஹா! வரு கிறேன் என்று சொல்லி ஒரு நாள் போனாராம். ப்ரவசனம் முடிந்த பிறகு ப்ரஹ்ம ஸ்ரீயிடம் இவ்வையங்கார் ஒரு கதை சொன்னாராம். அந்தக் கதையாவது—ஓரிடத் தில் ஒரு சாஸ்திரியார் ஸ்ரீராமாயண ப்ரவசனம் செய்கிறார். ஒருவர் மூலம் வாசிப் பதும் சாஸ்திரியார் கதை சொல்லுவதுமாக நடக்கிறதாம். மூலம் வாசிப்பவர் பத்து சுலோகங்கள் வாசித்து நிறுத்தினார். சாஸ்திரியார் சூர்பணகாபங்கக்கதை யைச் சொன்னார். மூலம் வாசிப்பவர் சில ச்லோகங்களை வாசித்து "இதி ஸ்ரீராமா யணே ஸுந்தர காண்டே தசமஸ்ஸர்க்க:" என்று முடித்தாராம். அதுகேட்ட சாஸ் திரியார், "அட இழவே! நீ யுத்த காண்டம் வாசிக்கிறாய் என்று நினைத்தன்றோ நான் சூர்ப்பணகாபங்கக் கதையைச் சொன்னேன். நீ ஸுந்தர காண்டம் வாசிப்பது முன்னமே தெரிந்திருந்தால் சீதா கல்யாணமோ, சபரி மோட்சமோ சொல்லி யிருப்பேனே" என்றாராம். அதைக் கேட்ட ரஸிகர்கள் "சாஸ்திரிகளே! நீங்கள் இராமாயணத்தை விட்டு வேறு எதிலும் போகவில்லை என்று நாங்கள் சந்தோஷிக் கிறோம்" என்றார்களாம். இந்தக் கதையை ராமரத்னமையங்கார் சொல்லக் கேட்ட ப்ரஹ்மஸ்ரீ 'என் ப்ரவசனம் அப்படித்தான் இருந்ததோ?' என்றாராம். அதற்கு ராமரத்னமையங்கார் "அந்த சாஸ்திரியாவது இராமாயணத்துக்குள்ளேயே கதை சொல்லிப் பொழுது போக்கினார். நீர் திருப்பாவை சொல்லுவதாக உட்கார்ந்து திருப்பாவையைத் தொடாமலே ஏதேதோ சொன்னீர்" என்றாராம். அப்படியானால் அந்தக் கதையை ஏதுக்கு இங்குச் சொன்னீர் என்று ப்ரஹ்மஸ்ரீ கேட்க, அய்யங்கார் ஏதோ சொல்லிவிட்டு வந்தாராம். இதை அவர் பலரிடம் சொல்லிக்கொண்டிருந் தார். இதன் தத்துவத்தை நாளது மார்கழியில் விருப்பமுள்ளவர்கள் பரீக்ஷித்துப் பார்க்கலாம்.

## ஸ்வாபதேச வ்யாக்யானங்களைப்பற்றி

திருப்பாவைக்குச் சில ஸ்வாபதேச வ்யாக்யானங்கள் பூர்வாசார்யர்களாலன் றிக்கே பிற்பட்டவர்களால் பணிக்கப்பட்டுள்ளன. நாமும் (ப்ர. அ.) பலபல பணித் திருக்கிறோம். பணித்தும் வருகிறோம். ப்ரஹ்மஸ்ரீ எழுதுகிறார் ஸ்வாப தேசார்த்தபரமாகச் சிலர் நூல்களிட்டு வ்யாக்யானங்களைக் கண்டிக்கிறார்கள் என்று இதற்குச் சொல்லுகிறோம். ஸ்வாபதேசார்த்தமென்பது உள்ளுறை பொருள். இது பூர் வாசார்ய வ்யாக்யானங்களிலும் ஆங்காங்கு நுட்பமாகக் காட்டப்பட்டேயுள்ளது. ஸ்வாபதேசார்த்தமானது அந்யாபதேசார்த்தத்தைக் கண்டிக்கவோ குலைக்கவோ வல்லதன்று. அலங்காரசாஸ்த்ர பரிசயமிருந்தால் இவர் இங்ஙனே எழுதமாட் டார். தேசிகன் ஸங்கல்ப ஸூர்யோதயத்தில்

"தர்போதக்ர தசேந்த்ரியாநந மநோநக்தஞ் சராதிஷ்டிதே
தேஹேஸ்மிந் பவஸிந்துநா பரிவ்ருதே தீநாம் தசாம் ஆஸ்த்தித:
அத்யத்வே ஹநுமத்ஸமேந குருணா ஸம்போதிதார்த்தஸ்ஸுதீ:
லங்காருத்த விதேஹராஜதநயா ந்யாயேந லாலப்யதே."

என்கிறவிந்த ச்லோகம் அருளிச் செய்துள்ளார்.

ஸ்ரீராமாயண கதையின் தத்துவத்தை-ஸாரார்த்தத்தை-ஸ்வாபதேசார்த்தத்தை இந்த ச்லோகம் உணர்த்துகின்றது. ஸீதாபிராட்டியின் ஸ்தாநத்தில் ஒரு சேதநனை வைத்து, பத்துத் தலையனான ராவணனுடைய ஸ்தாநத்தில் பத்து இந்த்ரியங்களைக் கொண்ட தீயபுந்தியை வைத்து, கடல் சூழ்ந்த லங்கையின் ஸ்தாநத்தில் ஸம்ஸாரக் கடலிலுள்ள தேஹத்தை வைத்து, திருவடியென்னும் ஹநுமானை ஆசார்ய ஸ்தாநத்தில் வைத்து.........இங்ஙனே ஸ்ரீராமாயண கதா ஸமந்வயம் செய்தருளியிருக்கிறார். இதனால் ஸ்ரீராமாயண ச்லோகார்த்தத்திற்கு என்ன ஹாநி விளைந்திட்டது? என்ன கண்டநம் நேர்ந்து விட்டது? ஸ்ரீஸூக்தி ரஸாநுபவம் பண்ணத் தெரியாதவிவர் "தத்தக பித்தக தாலேலோ" என்கிற ரீதியில் எழுதியுள்ளவற்றைக் கணிசித்து நாம் விடையிறுப்பதற்கு அடிக்கடி வருந்துகிறோம்.

## குழப்பம் என்பதுபற்றி மீண்டும்

"திருப்பாவை உபந்யாஸங்களைத் தங்களிஷ்டப்படி திருப்பாவைக்குக் கருத்து கூறி குழப்பத்தை உண்டுபண்ணி விட்டார்கள்.... .. .......திருப்பாவை உரையில் ஒரு புதுத் திருப்பம் ஏற்பட்டுதான் ஆகவேண்டும்" என்கிற ப்ரஹ்மஸ்ரீயின் வாக்கியங்களின் அஸப்யத்வத்தை எத்தனை தடவை எடுத்துரைத்தாலும் போதாது. இவர் ஆதரிக்கும் வேதலக்ஷணங்களாலும் வேதபாஷ்யங்களாலும் வைதிகவுலகில் விளைந்திருக்கிற குழப்பத்தை இவர் அறிந்தாரா? அந்தக் குழப்பத்தைச் சிறிதே எடுத்துக் காட்டுகிறேன் இங்கு. வேதலக்ஷணங்களால் விளைந்த குழப்பத்தை முன்னம் காட்டுகிறேன். (ஏஷ ஸ ஸ்ய இதி ச) என்பதொரு லக்ஷணஸூத்ரம். இதனால் "ஏஷ: ஸ: ஸ்ய:" என்கிற இப்பதங்கள் எங்கும் விஸர்க்காந்தங்கள் என்று காட்டப்படுகிறது. இதனால் "ஸர்வா தா விஷ்ய சிதிரேவ தேவ" என்கிற விடத்திலும் ஸ்ய: என்று விஸர்க்காந்தம் என்று தெரிவிக்கப்பட்டதாகிறது. அங்கு விஸர்க்கம் உண்மையில் கிடையாது. இந்த லக்ஷணஸூத்ரம் வைதிகர்களின் உள்ளத்தில் ஒரு குழப்பத்தை உண்டாக்கியிருப்பது அபலபிக்கமுடியாதது. இன்னொரு லக்ஷணஸூத்ரம் கேளீர். "இராவதீ ப்ரப்ருதி ஆதாதார (ஊராவதீ வூஹூதி ஞூாயாந) என்பது. இந்த ஸூத்ரத்தாலும் ஒரு பெரிய குழப்பம் உண்டு பண்ணப்பட்டிருக்கிறது. அதாவது "இராவதீ தேநுமதீ ஹி பூதம் ஸூயவஸிநீ மநவே யசஸ்யே வ்யஸ்கப்நாத் ரோதஸீ விஷ்ணுரேதே தாதார" என்கிற வேத வாக்யத்தில் ஈகாராந்தமாயும் ஏகாராந்தமாயுமுள்ள பதங்களுக்கெல்லாம் ப்ரக்ரஹமுண்டென்று காட்டப்பட்டது. இதைக் கொண்டு (மநவே இதி மநவே) என்று சொல்லவேணுமென்கிற குழப்பம் வைதிகர்களுக்கு உண்டாகியே யிருக்கிறது.

வேதபாஷ்யங்களாலுண்டான குழப்பத்தையும் காட்டுகிறேன். "ப்ரஹ்மா தேவாநாம் பதவீ: கவீநாம்." என்கிற வாக்யத்தில் பதவீ: என்கிற பதத்திற்கு (பதவீரிதி பத—வீ:) என்று வேஷ்டநம் பூமண்டலம் முழுவதும் ஓதப்பட்டு வருகிறது, வேஷ்டநம் என்றாலும் அவக்ரஹம் என்றாலும் பர்யாயம். இங்கு பட்ட பாஸ்கரபாஷ்யம் 'பதவீ:' என்பதற்கு வேஷ்டநம் கிடையாதென்று எழுதி

வைதிகவுலகில் மஹத்தான குழப்பத்தை உண்டு பண்ணியிருக்கிறது. இது மூன்ருவது காண்டத்தில். மேல் நான்காவது காண்டத்தில் ஒரு பெரிய குழப்பம் கேளீர். [தே க்ரீடயோ துநயோ ப்ராஜத்ருஷ்டய:] என்னும் வாக்யத்தில் "ப்ராஜ த்ருஷ்டய இதி ப்ராஜத்—ருஷ்டய:" என்று வைதிகவுலகமெங்கும் அவக்ரஹ மோதி வருகிறது. இங்கே ஸாயணபாஷ்யகாரர் [ப்ராஜ:— தீப்தி:] என்று உரைக்கிருர். ப்ராஜ பதமும் த்ருஷ்டிபதமும் இருப்பதாகக் காட்டினுரேயல்லது ப்ராஜத்பதமும் ருஷ்டிபதமும் இருப்பதாகக் காட்டவேயில்லை. இதிலிருந்து வைதிகர்களுக்கு ஏற்பட்ட குழப்பம் எற்றைக்கும் ஏழேழ்பிறவிக்கும் அபரிஹார்யம்.

இங்ஙனம் குழப்பத்தை விளைக்கவல்ல விஷயங்களை நமது வேதலக்ஷண நூல்களிலும் வேதபாஷ்ய விமர்ச நூல்களிலும் தென்மொழியிலும் வடமொழி யிலும் விவரித்திருக்கிருேம். தில்லிமாநகரில் நேற்றுப் பங்குனி மாதத்தில் நடைபெற்ற அகிலபாரத வேத வித்வத்ஸம்மேளனத்தில் குழுமியிருந்த ஆயிரக் கணக்கான வைதிக வித்வான்கள் கேட்டு "இவற்ருல் வைதிக வுலகில் குழப்பம் ஏற்படுவது உண்மையே" என்று தெரிவித்தார்கள்.

பூர்வாசார்ய வ்யாக்யானங்களாலோ இக்காலத்தவர்களின் திருப்பாவை உபந்யாஸங்களாலோ யாருக்கும் எவ்விதமான குழப்பமும் ஏற்படவில்லை.

## திருப்பாவை ஸதஸ்ஸுக்களின் ப்ரஸ்தாவம்

நாற்பத்துமூன்று வருஷங்களுக்கு மேலாக சென்னையில் நாம் திருப்பாவை ப்ரவசனம் நடத்தி வருகிருேம். அந்த மாதத்தின் பிற்பகுதியில் பல விடங்களில் பல பெரியார்கள்கூடி விராம தினங்களில் "திருப்பாவை வித்வத் ஸதஸ்ஸு" என்று நடத்தி வருகிருர்கள். அவற்றிலும் நாம் ஆஹ்வானத்திற் கிணங்க அந்வயிப் பதுண்டு. அந்த ஸதஸ்ஸுக்களில் தென்கலையாரும் வடகலையாருமான ப்ரவசன கர்த்தாக்கள் நியமேந பங்கு கொள்வதுண்டு. அவரவர்களின் ப்ரவசநங்களையும் நான் கேட்டிருக்கிறேன். குழப்பமுண்டாகும்படியாக ஒருவரும் பேசிக் கேட்ட தில்லை. அப்படிப் பேசுகிறவர்களின் பேச்சைக் கேட்க ஒருவரும் வந்து உட் காரவும் மாட்டார்கள். இவர் பேசப் புகுந்த விடங்களில் ஒருவரிருவர் கூட உட்காரமாட்டாத பரிதாபத்தினுல் இவர் எது எழுதினுலும் வாசிப்பவர்கள் சிரிப் பர்களேயொழிய வேருென்றும் செய்யார். அரசாணிபாலை வேங்கடாத்வரி தமது ஸுபாஷித கௌஸ்துபத்தில் ஒரு அற்புதமான ஸுபாஷிதம் கூறியுள்ளார். அதாவது

'வாசாடோக்தௌ வாகம்ருதே வா ஸுகவீநாம்
ஸ்தோகப்ரஜ்ஞா: துல்யத்ருசோ ஹந்த பவந்தி,
கோமாயூநாம் கோகிலயூநாமபி சப்தேஷு
ஏகாகாரர் மாநஸவ்ருத்திர் மஹிஷாணும்."

என்பது. இந்த ச்லோகத்தில் குறிப்பிட்ட ஸ்தோகப்ரஜ்ஞர் சிலர் இவருடைய பேச்சுக்கும் தலையாட்டக் கூடும். திருப்பாவைப் பிரவசநத்தினுல் குழப்பம் ஏற்பட் டிருந்தால் அது இவருடைய பேச்சுக்களினுல் ஏற்பட்டிருக்க வேணுமேயொழிய வேருெருவருடைய பேச்சினுலும் ஏற்பட வழியில்லை.

# திருப்பாவையின் அமைப்பு.

சூடிக்கொடுத்த நாச்சியாரான ஆண்டாள் திருப்பாவையை எங்ஙனம் அமைத்திருக்கின்ருளென்பதை நம் ஆசாரியர்கள் உற்று நோக்கி, ஏற்ற அவதாரிகையைப் பரக்க அருளிச்செய்துள்ளார்கள். இதில் ஈற்றுப்பாசுரமான *வங்கக்கடல் கடைந்த பாசுரத்தில் "திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி அங்கப் பறை கொண்டவாற்றை" என்றிருப்பதை முன்னம் குறிக்கொள்ள வேணும். முதற்பாட்டில் "சீர்மல்கு மாய்ப்பாடிச் செல்வச்சிறுமீர்காள்!" என்று விளித்திருப்பதை நோக்கினல் "திங்கள் திருமுகத்துச் சேயிழையார்" என்னப்பட்டவர்கள் திருவாய்ப்பாடிப் பெண்கள் என்பது அறியலாகும். அவ்வாய்ச்சிகள் திரண்டு நோன்பு நோற்ருர்களென்பது "நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற வம்மனுய்" "பிள்ளைகளெல்லாரும் பாவைக்களம் புக்கார்" "மிக்குள்ள பிள்ளைகளும் போவான் போகின்ருரைப் போகாமல் காத்து" இத்யாதி ஸ்ரீஸூக்திகளினுல் அறியலாகும். இவர்கள் முதல் நாளில் ஒன்று கூடி ஒரு ஸங்கேதம் செய்து கொண்டார்களென்பது பதினுன்காம் பாட்டில் "எங்களை முன்னமெழுப்புவான் வாய்பேசும் நங்காய்!" என்பதனுல் தெரியவரும். புராணத்தில் "ஊஷு: ஹவிஷ்யம் புஞ்ஜாநா: சக்ரு: காத்யாயநீவ்ரதம்" என்றிருப்பதை ஏகதேசம் ஆதாரமாகக் கொண்டாள் ஆண்டாள். "நெய்யுண்ணேம் பாலுண்ணேம்" என்கிற இரண்டாம் பாட்டு ஸ்ரீஸூக்தியானது "ஹவிஷ்யம் புஞ்ஜாநா:' என்றதை அடியொற்றியாம்.

ஆண்டாள் தாமே அருளிச் செய்த நாச்சியார் திருமொழியென்னும் இரண்டாவது திவ்ய ப்ரபந்தத்தில் ஆய்ச்சியர் சிற்றிலிழைக்க அதைக் கண்ணன் சிதைத்ததாக இரண்டாம் பதிகம் அமைக்கப்பட்டுள்ளது. கோபிகள் கூடலிழைத்ததாகவும் அதை ஆண்டாள் அநுகரித்துக் கூறியதாகவும் (நான்காவது திருமொழியில்) "ஆய்ச்சியர் கூடலைக் குழற்கோதை முன் கூறிய" என்பதனுல் காட்டப்பட்டது. ஆக இதனுல் சிலபதிகங்கள் அநுகார வகையில் அமைந்தனவென்பது பெறப்படும். ஆய்ச்சியர் சிற்றிலிழைக்க அதைக் கண்ணன் சிதைத்ததாகப் புராணத்தில் கூறப்படவில்லை. ஆய்ச்சியர் கூடலிழைத்ததாகவும் புராணத்தில் கூறப்படவில்லை. இவை அநுகார வகையில்தான் கூறப்படுகின்றனவென்பது ஆண்டாள் ஸ்ரீஸூக்தியினுல் ஸ்பஷ்டஸித்தம். திருப்பாவையிலமைந்த அநுகாரமும் இத்தகைத்ததே யாம். பாவநாப்ரகர்ஷத்தால் ஆயதென்க. வியாக்கியானங்களில் "துஷ்ட காளிய திஷ்டாத்ர க்ருஷ்ணேஹ மிதி சாபரா!" இத்யாதி புராணச்லோகங்களை எடுத்துக் காட்டியிருப்பதானது கோபிகளும் அநுகாரத்தினுல் தரித்தார்களென்பதைக் காட்டுவதற்கேயாம். திருப்பாவையிலமைந்த அநுகாரமானது முற்காலத்தில் கோபிகள் எப்படியெப்படிச் செய்தார்களோ அப்படியப்படி அநுகரித்ததாகத் தேருது. ஆண்டாளுடைய பாவநாப்ரகர்ஷத்தாலேயாகிய அநுகாரமிது. விசேஷித்து *நாயகனுய்நின்ற என்பது முதலாக உள்ள பாசுரங்களெல்லாம் ஆண்டாளுடைய் பாவனைக்கு மட்டுமேயமையுமேயொழிய கோபிக

ளுடைய ஆசரணைக்கு ஏலாது. *வல்லானை கொன்றானை* என்றும் *மல்லரை மாட்டிய தேவாதி தேவனை* என்றும் அவதரித்துள்ள பாசுரங்கள் திருவாய்ப்பாடியிலன்றிக்கே பிறகு வடமதுரையிலமைந்த சரிதைகளைக் கூறுவனவாதலால் இவற்றை யாய்ச்சிகள் அநுஸந்தித்திருக்க ப்ரஸக்தியில்லை. ஆகவே ஆண்டாளுடைய அநுகாரம் ஏகதேசாநுகாரமென்னப் பொருந்தும். பௌண்ட்ரகவாஸுதேவன் செய்த க்ருஷ்ணாநுகாரம் போன்றதன்றிது; பக்திப்ரகர்ஷப்ரயுக்தமிது. திருவாய்மொழியில் ஐந்தாம்பத்தில் *கடல் ஞாலப் பதிகமும் அநுகாரவகையில் அமைந்த தென்னுமிடம் அறியத்தக்கது. அவ்விடத்து வியாக்கியானங்களில் "தத்தைதத் பச்யந் ருஷி: வாமதேவ: ப்ரதிபேதே அஹம் மநுரபவம் ஸூர்யச்ச" இத்யாதி உபநிஷத் வாக்யம் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. திருமங்கையாழ்வாரும் திருக்கண்ணபுரப் பாசுரமொன்றில் "வடவரை நின்றும் வந்து இன்று கணபுரமிட வகை கொள்வது யாமென்று பேசினள்" என்னும் பாசுரத்தினால் தம்முடைய அநுகாரத்தைக் காட்டியருளினர். பகவத் விச்லேஷ வ்யஸனத்தை ஒருவாறு ஆற்றுதற்காகவே யாகுமிவ்வநுகாரங்கள்.

நமது ப்ரஹ்மஸ்ரீ ஐயங்காருக்கு எதிலும் ஸந்தேஹ விப்ரதிபத்தி ரூபமான ஞானமே யொழிய நிச்சயாத்மகமான ஞானமில்லை. இருந்தால் அது விபரீத நிச்சயமே யல்லது வேறில்லை. மேலே ஒரு கதை கேளுங்கள்.

## மாயவரம் மஹாதனிகரின் கதை

கீர்த்திமூர்த்தியான ஸ்ரீமத் தேரழுந்தூராண்டவன் ஒரு கதை ஸாதிக்கக் கேட்டதுண்டு; (அதாவது) மாயவரத்தில் ஒரு மஹாதனிகர் இருந்தாராம். அவர் வெறும் தனிகரேயல்லது ஞானலவலேசமும் அவர்க்கில்லையாம். அவர் தமது க்ருஹத்தில் ஸ்ரீராமாயண ப்ரவசனம் செய்வித்துப் புகழ் பெற விரும்பி வாசலில் பெரிய பந்தல் போடுவித்து சிறந்த வித்வானான ஒரு சாஸ்திரியைக் கொண்டு ப்ரவசனம் தொடங்குவித்து நடத்தி வந்தார். பல நூற்றுக்கணக்கான ஜனங்கள் கேட்டுக் களிக்கிறார்கள். இந்த தனிகர் சாஸ்திரிக்கு பீதாம்பரங்களும் பட்டு வேஷ்டிகளும் பணமுடிப்புகளும் அபரிமிதமாக வழங்கிவருகிறார். ஆறு மாத காலம் ப்ரவசனம் நடந்து முடிந்தது சாஸ்திரிகள் புறப்பட்டு ஊருக்குச் செல்லுகிறார். பல பண்டிதர்கள் அவர்க்கு வழி விடும்போது பல ஸந்தேஹங்களைக் கேட்டு விடை பெறுகிறார்கள்.

இந்த தனிகர் "நாம் ஒன்றும் கேளாமலிருந்துவிட்டால் நன்றாயிராது. நாமும் ஏதாவது கேட்போம்" என்று "சாஸ்திரிகளே! ஒரு ஸந்தேஹம்" என்றார். சொல்லவேணுமென்றார் சாஸ்திரி. தனிகர் ஸந்தேஹம் கேட்கிறார்— "சாஸ்த்ரிகளே! தங்கள் அருமையான பிரவசனத்தை வெகு ஆனந்தமாகக் கேட்டு வந்தேன். தாங்கள் ராமனென்றும் ராவணனென்றும் ராக்ஷஸனென்றும் சொல்லி வந்தீர்கள்; ராமன் ராக்ஷஸனா? ராவணன் ராக்ஷஸனா? என்று ஸந்தேஹம். தயவு செய்து தீர்க்கவேணும்" என்று. சாஸ்திரிக்கு ஒன்றும் தோன்ற வில்லை.

அழமாட்டாத துக்கம். கேட்ட கேள்விக்கு பதில் சொல்லியாக வேண்டுமே! சொன்னாராம்—"ராவணனும் ராக்ஷஸனல்லன், ராமனும் ராக்ஷஸனல்லன்; உன் வீட்டில் ஆறு மாதம் ம்ருஷ்டான்ன போஜனம் செய்து, பட்டு பீதாம்பரங்களும் பணமுடிப்பும் பெற்றுப்போகிற நான்தானப்பா ராக்ஷஸன்"— என்று. அது கேட்ட தனிகர் "வெகுநாளாக இருந்த ஸந்தேஹம் தீர்ந்தது. ஸந்தோஷம். போய்வாருங்கள்" என்றாராம். இக்கதை தேரழுந்தூராண்டவனுடைய கற்பனையா யிருக்குமே யல்லது ஸம்பாவிதமாயிராது என்று நினைத்திருந்தேன். "கிம் கிம் ந ஸம்பாவ்யதே."

வர்த்தமாந ஸ்ரீமதாண்டவனும் (திருவிண்ணகர்) ரஸிகவித்வத் ஸார்வ பௌமரான நவநீதம் ஸ்ரீராமதேசிகரும் திவ்யப்ரபந்தங்களில் கட்டுரைகள் எழுதுகிறார்களே, நாமும் எழுதக் குறை என்? என்று நினைத்துப் போலும் ப்ரஹ்ம ஸ்ரீ தாமும் எழுத முன் வந்து விட்டார்! திவ்யப்ரபந்த ப்ரேமைக நிருபணீயர்கள் அவர்கள். தந்மாத்ஸர்யைக நிருபணீயர் இவர். நமது த்ரமிடோபநிஷத்ப்ரபாவ ஸர்வஸ்வம் கண்டபின்பு இவருக்கு மாச்சரியம் மாறியிருக்குமென்றிருந்தோம். அநிர்வசநீய பாக்யமடியாகவன்றோ அது விளையவேண்டும்!

## திவ்யப்ரபந்த வியாக்கியான பேத விசாரம்.

ப்ரஹ்மஸ்ரீ எழுதுகிறார் "மேலும் வ்யாக்யானங்கள் ஒன்றுக்கொன்று வேறு பட்டுப் பேசுவதால் வாஸ்தவார்த்தம் என்ன வென்றே புரியவில்லை" என்று "நமது பாஷ்யகாரர் ஸ்ரீ பாஷ்யம் ஸாதித்ததோடு நில்லாமல் வேதாந்ததீபமென்றும் வேதாந்த ஸாரமென்றும் வேறு சில க்ரந்தங்களையும் எழுதி வைத்ததனால் பாஷ்ய பங்க்திகள் வேறாயும் தீபஸாரி பங்க்திகள் வேறாயுமிருப்பதனால் வாஸ்தவார்த்தம் என்னவென்றே புரியவில்லை" என்னுமாபோலே யிராநின்றதிது. ஒரு மூலத்திற் குப் பல வியாக்யானங்கள் அவதரித்திருப்பதை எங்கும் காண்கிறோம். சிற்சில விடங் களில் அபிப்ராயபேதம் காண்பதுமுண்டு. அதனாலென்ன? இவர் நிருபகராயிருந் தால் வ்யாக்யானங்களிலுள்ள பேதங்களை யெடுத்துக்காட்டி, அதனாலுண்டாகும் வாஸ்தவார்த்த லோபத்தையும் எடுத்துக்காட்டியிருக்க வேணும். தலைகாலில்லாத வார்த்தைகளை எழுதிவைப்பதனால் பாமரர்களும் வஞ்சிக்கப் படமாட்டார்கள்.

## தென்கலை வடகலை வ்யாக்யான விசாரம்.

இதற்கு மேலெழுதுகிறார் ப்ரஹ்மஸ்ரீ. "தென்கலை வடகலை ஸம்பிரதாய ரீதியிலும் வ்யாக்யானங்கள் பாட்டின் கருத்திலேயே மாறுபடுகின்றன" என்று. இதற்குச் சொல்லுகிறோம். எந்த வ்யாக்யானத்தையும் குருமுகமாகக் கேளாத விவர் இன்னது சொல்லுகிறார் என்று ஒருவருக்கும் புலப்படாதபடி எழுதிக் கொண்டு போவதனால் என்ன லாபம்? இவர் உண்மையில் வ்யாக்யானங்களில் பரிச்ரமப்பட்டிருந்தால் உட்புகுந்து விஷயங்களை எடுத்துக்காட்டுவர். ஸாமாந்ய வார்த்தைகளை எழுதுவது பண்டிதலக்ஷணமன்று. இவ்வகையில் எல்லா க்ரந்தங்

களையுமே எளிதாகத் தூஷித்து விடலாம். பகவத் கீதையை மூன்று பாஷ்யங்களுடனும் பல டீகைகளுடனும் ஆனந்தா ப்ரஸ்ஸில் அற்புதமாக அச்சிட்டிருக்கிறார்கள். அவற்றையெல்லாம் பார்க்கும்போது பல விசிகித்ஸைகளுண்டாகும். எவரெவர்க்கு எதிலெதில் ருசியோ அவரவர்கள் அததைப் பேணுகிறார்கள். திருப்பாவை விசாரத்தில் ப்ரஸக்தியற்ற இத்தகைய விஷயங்களைக் கொண்டு காடு பாய்வது அத்யந்த சோசநீயம்.

## ப்ரஹ்மஸ்ரீயின் அஸம்பத்தப் பேச்சுக்கள்

மேலும் ப்ரஹ்மஸ்ரீ எழுதுகிறார். "இளம்பெண்ணாக இளம் பெண்களோடு சேர்ந்து பாடிய பாட்டின் உரை வியாஜத்தில் ஸம்பந்த மில்லாத விஷயங்களைச் சேர்த்து வியாக்யானம் செய்யப் படுகிறது" என்று. இதனால் இவர் திருப்பாவை வ்யாக்யானங்களின் அட்டையைக் கூடப் பாராதவர் என்பது புலனாகும். வ்யாக்யானகர்த்தாக்களான பேராசிரியர்களின் ஞானப் பெருமையை மதிப்பிடுவதற்கு இவரா அதிகாரி? வேதாந்தவாசிரியர் அந்த வ்யாக்யானங்களைக் கொண்டு போது போக்கியிருக்கிறாரென்பதை அவருடைய திவ்யக்ரந்தங்கள் பலவற்றைக் கொண்டு பலகால் நிரூபித்திருக்கிறோம். "ஸம்பந்தமில்லாத விஷயங்களைக் கொண்டு கூட்டுகிறார்கள்" என்றெழுதுவதற்கு இவரா அதிகாரி? இதெல்லாம் விரலுக்குத் தகாத வீக்கமத்தனை.

## வேதமும் காமரஸ ப்ரவாஹமும்.

ப்ரஹ்மஸ்ரீ பலகால் எழுதுவதாவது "ஏற்கனவே காமரஸத்தில் ஈடுபட்டு அல்லல்படும் மனிதரை மேலும் காமரஸத்தில் ஈடுபடத்தூண்டுகிறது. காமரஸ நிலையிலே விசேஷார்த்தங்களைக் கூறுவது சிற்றின்பப்படுகுழியில் மிகவும் ஆழ்த்துகிறது. 'ஸ்ரீஸ்தனத்திலும் பூஸ்தனத்திலும் மக்னனானபடி பிறர் உணர்த்தும்படி போக பரவசமானான். பிராட்டிமார் போகரஸத்திற்கு இடங் கொடாமல் சாய்த்துள்ளான். பிராட்டி ஸ்தனத்தால் இடித்தாலும் விரைவில் தூங்கி விடுகிறான்' என்பது இவர்களுடைய கல்பனை" என்று. இதெல்லாம் இவருடைய நிர்மூல கல்பனை. எவ்விடத்தில் யாருடைய வாக்யங்களிவை? நீளாதுங்கஸ்தனகிரிதடீஸுப்தம் இத்யாதியான திருப்பாவைத் தனியன் ஸ்ரீபராசரபட்டார்யர் அருளிச் செய்ததென்பது உலகமறிந்தது. அதிலிருந்தே இவர் தூஷிக்கத் தொடங்கியுள்ளார். காமரஸம், காமரஸம் என்று அடிக்கடி எழுதுகிறார். இங்கே நாம் முக்யமாக விஜ்ஞாபிப்பதை ஸ்ரீவைஷ்ணவவுலகமெல்லாம் குறிக் கொள்ளவேணும்.

ஸம்ஸ்க்ருத வேதம் த்ராவிட வேதம் என்கிற இரண்டையும் நாம் இரு கண்களாகக் கொண்டிருக்கிறோம் நம்மாழ்வார் திருவாய்மொழி தொடங்கும்போதே "உளன் சுடர்மிகு சுருதியுளிவையுண்டசுரனே" என்றருளிச் செய்தார். அதை மணவாள மாமுனிகள் "உயர்வே பரன்படியை உள்ளதெல்லாந்தாம் கண்டு உயர்வேத நேர்கொண்டுரைத்து" என்று எடுத்துக்காட்டியருளினார் உபதேசரத்தினமாலையிலும், ஆழ்வார்கள் அருளிச்செயலுக்கும் ஆசார்ய ஸ்ரீஸூ

திகளுக்கும் வாழ்த்துக் கூறும் பாசுரத்தில் "செய்யமறை தன்னுடனே சேர்ந்து' என்று விசேஷித்தருளிச் செய்ததும் குறிக்கொள்ளத் தக்கது. நாம் ஸம்ஸ்க்ருத வேதாத்யயனத்தாலே ப்ராஹ்மண்ய ரக்ஷணமும் த்ராவிட வேதாத்யயனத்தாலே ஸ்ரீவைஷ்ணவத்வ ரக்ஷணமும் செய்து போருகிறோம். விசேஷித்து ஸம்ஸ்க்ருத வேதத்தின் ஏற்றத்தை "வேதாக்ஷராணி யாவந்தி படிதாநி த்விஜாதிபி:, தாவந்தி ஹரிநாமாநி கீர்த்திதாநி ந ஸம்சய:. வேதமேவ ஜபேந் நித்யம் யதாகாலம் அதந்த்ரித:, நஹ்யஸ்யாஹு: பரம் தர்மம் உபதர்மோந்ய உச்யதே" இத்யாதி ச்லோகங்களினால் நிச்சலும் பறைசாற்றி வருகிறோம். வேதத்தினால் தான் உலகம் நிலைத்திருக்கிற தென்ற திட நம்பிக்கையும் கொண்டிருக்கிறோம்.

திவ்யப்ரபந்தங்களில் பகையே வடிவெடுத்த இந்த ப்ரஹ்மஸ்ரீ ஐயங்கார் வடமொழி வேதத்தில் பரிசயம் கொண்டவர் என்றறிந்திருக்கிறோம். அந்த வடமொழி வேதம் காமரஸத்தை எவ்வளவு ஊட்டியும் நாட்டியும் இருக்கிறதென்பதை ப்ரஸங்காத் இங்கு நாம் எடுத்துக் காட்ட வேண்டியது அவச்யமாகிறது.

## வேதத்திலுள்ள சிற்றின்ப வெள்ளங்கள்.

தைத்திரீய யஜுஸ்ஸம்ஹிதையில் இரண்டாவது காண்டம் ஐந்தாவது பிரச்னம் விச்வருபப்ரச்நமென்று ப்ரஸித்தி பெற்றது. அதில் முதலநுவாகத்தில் ஒரு பெரிய உபாக்கியானம் ஓதப்பட்டுள்ளது. [விஶ்வரூபோ வை த்வாஷ்ட்ர: புரோஹிதோ தேவாநாமாஸீத்] [விச்வரூபோ வை த்வாஷ்ட்ர: புரோஹிதோ தேவாநாம் ஆஸீத் ஸ்வஸ்ரீயோ ஸுராணாம்] (பாஷ்யத்தை யநுஸரித்த பொருள் விவரணம்) த்வஷ்டாவின் மகன் விச்வருபனென்பவன் தேவர்களுக்குப் புரோஹிதன், அஸுரர்களுக்கு தேஹபந்து. [தஸ்ய த்ரீணி சீர்ஷாணி ஆஸந் ஸோமபாநம் ஸுரா பாநம் அந்நாதநம்] அந்த விச்வருபனுக்கு மூன்று தலைகள். ஒரு முகத்தால் ஸோமபானமும் மற்றொரு முகத்தால் ஸுராபாநமும் இன்னொரு முகத்தால் அந்நாசனமுமாக இருந்தது. [ஸ ப்ரத்யக்ஷம் தேவேப்யோ பாகமவதத், பரோக்ஷம் அஸுரேப்ய:] அவன் பலரெதிரில் தேவர்களுக்கு ஏற்றம் கூறுவன். ஏகாந்தத்தில் அஸுரர்களுக்கு ஏற்றம் கூறுவன். [தஸ்மாத் இந்த்ர: அபிபேத்] விச்வருபனுடைய இத்தகைய நிலைமையைக் கண்டு இந்திரன் அஞ்சினான். [தஸ்ய வஜ்ரமாதாய சீர்ஷாணி அச்சிநத்] உடனே வஜ்ராயுதத்தைக் கொண்டு அவனது மூன்று தலைகளையும் அறுத்தொழித்தானிந்திரன். [யத் ஸோமபாநமாஸீத் ஸ கபிஞ்ஜல:........] இந்திரனாலறுக்கப்பட்ட மூன்று தலைகளும் மூன்று பறவைகளின் வடிவங்கொண்டன. இதனால் இந்திரனுக்கு ப்ரஹ்மஹத்யாபாபமுண்டாயிற்று. அதை அவன் கையேற்றுப் பெற்றுக் கொண்டான். ஒரு ஸம்வத்ஸரமாகியும் இந்திரன் அதற்குப் பரிஹாரமொன்றும் செய்யாமையினாலே பிராணிகளெல்லாரும் "ப்ரஹ்மஹத்திகாரா!" என்று அவனைப்பழிக்கத் தொடங்கினர். [ஸப்ருதிவீமுபாஸீதத் இத்யாதி.] அவமானம் பொறுக்கமாட்டாத இந்திரன் ப்ரஹ்மஹத்யாபாபத்தைத் தொலைக்கவேண்டி இந்நிலவுலகுக்கு வந்து முதன்முதலாக பூமிதேவியை

நோக்கி இப்பாபத்தின் மூன்றிலொருபங்கை ஏற்றுக்கொள்ளும்படி வேண்டினன். பூமிதேவி ஒரு வரம் வேண்டிப் பெற்று அப்படியே ஏற்றுக்கொண்டாள். பிறகு இந்திரன் வ்ருக்ஷங்களை யணுகி, அவ்வாறே வேண்டினன். அவையும் ஒரு வரம் பெற்று ஏற்றுக்கொண்டன. ப்ரஹ்மஹத்யையின் மூன்று பாகங்களில் இரண்டு பாகங்கள் கழிந்து விட்டன. இனி மூன்ருவது பாகம் கழியுண்ணும் வகையை வேதமோதுகிறபடி கேளீர்:—

[ஸ ஸ்த்ரீஷகும்ஸாத முபாஸீதத். இத்யாதி.] ப்ரஹ்மஹத்யையின் மூன்ருவது பகுதியைக் கழிக்க வெண்ணின தேவேந்திரன் மாதர்களின் கூட்டத்தை யணுகி அவ்வாறே வேண்டினன். அப்போது மாதரசிகள் வேண்டின வரம் இன்னதென்பதைக் கூறுகின்ருன் வேதபுருஷன்.

[தா அப்ருவந் வரம் வ்ருணாமஹை ருத்வியாத் ப்ரஜாம் விந்தாமஹை காமம் ஆவிஜநிதோஸ் ஸம்பவாமேதி] ஸ்த்ரீகள் வேண்டினவரமிதுவாம். நாங்கள் கருத் தரித்த பின்பு மற்ற ஜந்துக்களைப் போலே பதி ஸம்போகம் கொள்ளாமலிருந்து வருகிருேம். இனி அப்படியல்லாமல் ப்ரஸவக்ஷணம் வரையில் யதேஷ்டமாக ஸம்போகரஸம் அநுபவிக்கக்கடவோ மென்று. இந்திரன் அப்படியே வரங் கொடுத்திட்டான். ஆகவே தான் ஸ்த்ரீகள் கர்ப்பிணிகளான பிறகும் யதேஷ்ட மாக ஸம்போகம் செய்து கொண்டிருக்கிருர்கள்.

இங்ஙனே நாம் செய்திருக்கிற விவரணம் வேதாக்ஷரங்களுக்கு ஈஷத்தும் மாறுபடாததென்பதை வைதிகர்கள் உணர்வர்கள். பர்ஷ்யங் கொண்டு அறியப் பரிச்ரமப்படவேண்டா. ஸம்ஸ்க்ருதஜ்ஞர்கள் மூலத்தின் மேல் இப்பொருளை எளிதாக உணருவர்கள்.

ப்ரஹ்மஹத்யாபாபத்தின் மூன்ருவதான ஒரு பகுதியைப் பெற்றுக் கொண்ட மாதரசிகள் அப்பாபத்தின் அறிகுறியாக ரஜஸ்வலாத்வம் பெற்றமை [ஸா மலவத்வாஸா அபவத்] என்று கூறி, அதன்மேல் பல நிபந்தனைகள் விரிவாகக் கூறப்படுகின்றன [தஸ்மாத் மலவத்வாஸஸா ந ஸம்வதேத, ந ஸஹாஸீத நாஸ்யா அந்நமத்யாத்.........] இத்யாதியால். இதன் பொருளாவது—ரஜஸ்வலா ஸ்த்ரீயோடு ஸம்பாஷணை செய்யக்கூடாது. அவளோடுகூட இருக்கக் கூடாது அவளிடத்தில் போஜனம் கொள்ளக்கூடாது. (என்று சொல்லி) அடுத்தபடியாக "அப்யஞ்ஜனம் வாவ ஸ்த்ரியா அன்னம், அப்யஞ்ஜனமேவ ந ப்ரதிக்ருஹ்யம் காமமந்யத்." என்று ஓதப்பட்டுள்ளது. இதன் பொருள் என்ன வென்ருல் ரஜஸ்வலா ஸ்த்ரீயினிடமிருந்து அந்நம் கொள்ளக் கூடாதென்றது அப்யஞ்ஜனங் கொள்ளக் கூடாதென்றபடி. அந்நமென்றது அப்யஞ்ஜநமென்ற படி. அப்யஞ்ஜநங் கொள்ளக் கூடாதே யொழிய விருப்பமிருந்தால் அந்நங் கொள்ளலாம் என்று இது ஒரு பக்ஷமாகக் கூறப்பட்டுள்ளது. இதற்கு மேலே ரஜஸ்வலா ஸ்த்ரீயினிடத்தில் ஸம்போகம் செய்யக்கூடாது என்று தொடங்கி பல அரிய பெரிய விஷயங்களைக் கூறி அவ்வநுவாகம் தலைக்கட்டப்பட்டது. நம் ப்ரஹ்மஸ்ரீயின் விசாரகௌசலம் இத்தகைய இடங்களில் ப்ரஸரித்தால் விலக்ஷண மான லோகோபகாரமாகும்.

வேதத்திலுள்ள விஷயங்களை இன்னமும் கேளீர். ஆருவது காண்டம் முதல் ப்ரச்நத்தில் "காமுகா ஏநம் ஸ்த்ரியோ பவந்தி" என்று ஓதப்பட்டுள்ளது. இதன் பொருளை நாம் விவரிக்க வேணுமோ? ஒரு வித்வானை யெடுத்துக்கூறி 'இவரிடத்தில் ஸ்த்ரீகள் காமங் கொள்ளுவர்கள்' என்று பலன் கூறப்பட்டுள்ளது. அதே காண்டத்தில் ஐந்தாவது ப்ரச்நத்தில் மிகவும் ஜுகுப்ஸநீயமான வாக்யங் களை ஓதி வருகிரோம். "நக்நம்க்ருத்ய ஊருமுபப்ரவர்த்தயதி ஊருணுஹி ரேதஸ் ஸிச்யதே. அத மிதுநீ பவத: அத ப்ரஜா: ப்ரஜாயந்தே." இத்யாதிகள். இதன் அர்த்தத்தை ஸம்ஸ்க்ருத ஜ்ஞான மில்லாதவர்களும் தெரிந்து கொள்வார்கள். இந்த வேதாக்ஷரங்களையும் கூட "தாவந்தி ஹரிநாமாநி கீர்த்திதாநி" யில் சேர்த்துக் கொண்டுதானிருக்கிரோம்.

அடுத்த ஏழாவது காண்டத்தில் நான்காவது ப்ரச்நத்தில் "அம்பே அம்பால் யம்பிகே" என்று தொடங்கும் அநுவாகம் மிகமிக வெறுக்கத்தக்க பொருளைக் கொண்டது. அந்த அநுவாகத்தை நாம் ஓதாமலில்லை. எம்பெருமான் முன்னிலை யிலும் கோஷிக்கிரோம். இவ்வநுவாகத்திலுள்ள பதங்களின் அர்த்தம் ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் "தோஷாநுசிந்தநார்த்தா ஸ்ம்ருதிரபி தூரீகரோதி வைராக்யம்" என்கிற தேசிக ஸ்ரீஸூக்தியின் படி வீதராகர்களுக்கும் ராகத்தை உண்டுபண்ணுவதே. இவ்வநுவாகத்திலுள்ள சில வாக்யங்களைக் கேளீர்."

"நமாயபதி கச்சந...தௌ ஸஹ சதுர: பத: ஸம்ப்ரஸாரயாவஹை....ஜீவ போஜந: பிலதாவந:............ய ஆஸாம் க்ருஷ்ணே லக்ஷ்மணி ஸர்திக்ருதிம் பராவதீத்" இதற்கு மேல் ஒரு வாக்யங் கேளீர். "ஆஹதம் கபே பஸோ நிஜல்குலீதி தானிகா" என்பது. இங்கு 'கபே' என்றது 'பகே' என்றபடி. பஸ: என்றது சேப: என்றபடி. சப்தத்தை மறைத்துச் சொன்னதனுல் அர்த்தம் மறையவில்லை. இடையில் "ப்ரிய: ஸ்த்ரீணும் அபீச்ய:" என்ருெரு வாக்யம். ஸ்த்ரீகளுக்கு அபீச்யன் ப்ரியன் என்கிறது இதில். அபீச்யன் என்பதற்கு என்ன பொருளென்பதை இந்த ப்ரஹ்மஸ்ரீ விவரித்து வைதிக வுலகுக்கு உபகாரம் செய்யலாமே. முந்தின அநுவாகங்களுக்கும் பிந்தின அநுவாகங்களுக்கும் இடையிலுள்ள இந்த அம்பே அம்பால்யநுவாகத்தினுல் என்ன அபூர்வார்த்தம் ஸாதிக்கப்படுகிற தென்பதை வைதிகவுலகம் தெரிந்து கொள்ளட்டும். இதை யெல்லாம் நாம் தோஷோத்பாவந புத்தியோடு எழுதுகிரோமல்லோம். ஹேய மான காமரஸத்தின் ப்ரஸ்தாவகந்தமுமில்லாத திருப்பாவையிலும் தத்வ்யாக் யானங்களிலும் ஸர்வாத்மநா அஸ்த்தாநே கலங்கி தோஷோத்பாவநம் செய்யப் புகுந்தவிவர் மேலே உதாஹரித்த வேதவாக்யக்களில் காமரஸம் கூறப்படவில்லை, பக்திரஸமே கூறப்படுகிறது என்று நிரூபிக்க வேண்டியது அவச்யம்.

திவ்யதேசங்களில் எம்பெருமான்களுக்குத் திருக்கல்யாண மஹோத்ஸவங் கள் பங்குனியுத்தரம் முதலான ப்ரகரணங்களில் நடத்தப்பட்டு வருங்கால் "ரேதஸ் ஸிஞ்சந் ப்ரஜா: ப்ரஜநயந்" இத்யாதி வாக்யங்களைப் பெருமிடறு செய்து கோஷித்து வருகிரோம். இந்த ப்ரஹ்மஸ்ரீ இத்தகைய வாக்யங்களின் அர்த்தா நுபவத்தோடு விச்ராந்தி பெற்றிருக்கலாமே! சில பாமரர்களிடத்தில் இவர்

இதைக்காட்டி "அண்ணங்கராசாரியர் வேததூஷணம் செய்கிறபடியைப் பாருங்கள்" என்று பேசி மயக்கலாம். நாம் ஸ்ரீமத் வேதமார்க்க ப்ரதிஷ்டாபநாசார்யர்களாகவும் உபய வேதாந்த ப்ரவர்த்தகாசார்யர்களாகவுமிருப்பவர்களே யல்லது, வேத தூஷணத்தில் அணுவளவும் ருசியுடையோமல்லோம். "த்ரிகும்சத் அஸ்யா ஜகநம் யோஜநாநி" இத்யாதி வாக்யங்களை யெடுத்துக் காட்டி வேத தூஷணம் செய்பவர்கள் திருவயிந்திரபுரத்தில் மலிந்திருக்கிறார்கள். இங்கு நாமெடுத்துக் காட்டிய வேத வாக்யங்கள் அக்னிஹோத்ரியின் விமர்சத்திற்கு இலக்காக வேணுமேயொழிய *பாதகங்கள் தீர்க்கும் பரமனடி காட்டும் வேதமனைத்துக்கும் வித்தாகும் கோதை தமிழில் இவர் கைவைப்பது தகாது தகாது தகாதென்று பலகாலுணர்த்துகிறோம். இனி இன்னுமுள்ள இவரது வாக்யங்களை அடைவே ஆராய்ந்து பல தத்துவங்களை உணர்த்துவோம்.

## ஸ்தநகிரிதடீஸுப்த முத்போத்ய க்ருஷ்ணம்

திருப்பாவையில் *குத்துவிளக்கெரிய பாசுரத்தில் "நப்பின்னை கொங்கை மேல் வைத்துக் கிடந்த மலர் மார்பா வாய்திறவாய்" என்கிற ஸ்ரீஸூக்தியையடியொற்றி பட்டர் ஸாதித்த தனியன் "நீளாதுங்கஸ்தநகிரிதடீஸுப்தம்" என்பது. அதனை இந்த ப்ரஹ்மஸ்ரீ தூஷிக்கத் தலைப்பட்டார். குத்துவிளக்கெரிய பாசுரத்தின் வியாக்யான அவதாரிகை இன் சுவையே வடிவெடுத்தது. அவ்விடத்து ஸாரமான சில பங்க்திகள் கேண்மின். (மூவாயிரப்படி ஸ்ரீஸூக்தி) "இத்தால் – ஆச்ரிதர்க்கு மாறி மாறிப் பரிகைக்கு *என்னடியார் அது செய்யார்* என்னுமவனும், *ந கச்சிந் நாபராத்யதி* என்னுமவளும் இருவரும் உண்டென்கை. ஆறாயிரப்படி ஸ்ரீ ஸூக்தியும் கேண்மின். "இத்தால்- ஆச்ரிதர்க்கு மாறி மாறி ஒருவர்க்கொருவர் பரிந்து நோக்குகையாலே நமக்குத் தஞ்சமாயிருப்பதொரு மிதுநமுண்டென்கிறது. மேலுள்ள ஸ்ரீஸூக்திகளும் பரம போக்யமானவை. அவற்றில் கண் செலுத்த பாக்யஹீனரானவிவர் எழுதுமவற்றைக் காண்பதும் காட்டுவதும் மஹாபசாரமாகும். நீளாதுங்கேத்யாதி தனியனை அருளிச்செய்த பட்டர் "பாரார்த்த்யம் ஸ்வம் ச்ருதிசத சிரஸ்ஸித்தம் அத்த்யாபயந்தீ" என்றருளிச் செய்த ஸ்ரீஸூக்தி மிகவும் அற்புதமானது. திருப்பாவையில் ஆண்டாள் அருளிச்செய்த பாரார்த்யம் ச்ருதி ஸித்தம், ச்ருதிசதஸித்தம், ச்ருதிசதசிரஸ்ஸித்தம் என்கிறார். எந்த ச்ருதியில் ஸித்தம், ச்ருதிசதங்கள் எவை ச்ருதிசதசிரஸ்ஸு எது என்கிற விசாரத்திலே யிறங்கி வேதார்த்தங்களையும் வேதாந்த விழுப்பொருள்களையும் இவர் விளக்க வல்லராகில் இவருடைய வேதபரிச்ரமம் ஸார்த்தகமாகும். நீளாதுங்கேத்யாதி ச்லோகரத்நத்தில் "க்ருஷ்ணம் பாரார்த்யம் ஆவேதயந்தீ" என்னலாமா யிருக்க "அத்யாபயந்தீ" என்று பட்டர் அருளிச்செய்ததன் கருத்தை இவர் அறியகில்லார். அறிவிக்கிறோமிங்கு. பட்டர் தாமே ஸ்ரீ ரங்கராஜஸ்தவத்தில் உத்தரசதகத்தில் "வேதா: ப்ரமாணம் தத:" என்று தலைக்கட்டுகிற ச்லோகத்தில் ஸம்ஸ்க்ருத வேதத்தின் ப்ரசாரத்தைப் பற்றி "ஸாதிக்கையில் "ஸுப்தோத்புத்த விரிஞ்சபூர்வஜநதாம் அத்த்யாப்ய" என்றருளிச் செய்தார். துயிலெழுந்த பிரமன் முதலானார்க்கு எம்பெருமான் ஸம்ஸ்க்ருத வேதத்தை அத்யா

பனம் செய்து வைத்ததாகச் சொன்னபடி. அங்கு அத்யாபகன் எம்பெருமான். அத்யாப்யர்கள் பிரமன் முதலானோர். இங்கு அத்யாபநம் செய்தவள் ஆண்டாள். அத்யாப்யன் ஸுப்தோத்புத்தனான கண்ணபிரான். எம்பெருமானுக்கு அத்யா பநம் செய்தவள் ஆண்டாளாகிருள். ஆனது பற்றியே திவ்யப்ரபந்தம் வல்லவர் களை 'அத்யாபகர்கள்' என்று அந்நாள் தொடங்கி வழங்கி வருகின்றதுலகம். வடமொழி வேதமோதினவர்கட்கு (ஜடாகனங்கள் ஓதினவர்களுக்கும்) 'அத்யேதா' என்றுதான் பெயர். திவ்யப்ரபந்தத்தை (திருப்பாவை மட்டும்) ஓதினவர்களுக்கும் அத்யாபகர்கள் என்று திருநாமம். இத்தகைய வ்யபதேசம் பெறும் பாக்யத்தை நமது ப்ரஹ்மஸ்ரீ ஜந்மாந்தரத்தில்கூடப் பெறுவதற்கு அவகாசமில்லாதவராகி ருர். பாரார்த்யம் என்கிற சொல்லுக்கு பஹுவ்ரீஹி ஸமாஸஸித்தமான அர்த்தம் தவிர "ஸ்வார்த்தே ஷ்யஞ்" என்கிற வ்யாகரண முறையில் பரமார்த்தம் என்கிற பொருளும் தேறும். அந்தப்பொருள் எப்படிப்பட்டதென்னில் "ச்ருதிசதசிரஸ் ஸித்தமானது" என்று வேதம்வல்ல பட்டர் அருளிச்செய்துள்ளார். இதில் விப்ரதி பத்தி கொண்ட விவரைத் தெளிவிக்க யாரே வல்லவர்? திருப்பாவையிற்காட்டி லும் பட்டர் அருளிச்செய்த இந்தத் தனியனில்தான் வைதிக வுலகமெல்லாம் ஈடு பட்டுக் கிடக்கிறது. "ஸ்தனகிரிதடீ ஸுப்தம்" என்கிற ஸ்ரீ ஸூக்தியின் மரும மறிந்து ஈடுபடகில்லாமல் அத்யந்த ஜுகுப்ஸநீயமான வாக்கியங்களினால் இழித் துரைக்கின்றவிவர்க்கு ஆராவமுதன் அருள்கூர்ந்து நன்மதியளிப்பானாக.

## ஸ்ரீ ராமாயணத்தில் ஒரு ரஸ விசேஷம்

"படிகொண்ட கீர்த்தியிராமாயணமென்னும் பத்திவெள்ளம்" என்று புகழ் பெற்ற ஸ்ரீராமாயணத்தில் கிஷ்கிந்தா காண்டத்தில் சரத்ருது வர்ணநத்தில் "தர்சயந்தி சரந்நத்ய: புலிநாநி சநை: சநை:, நவஸங்கம ஸவ்ரீடா: ஜகநாநீவ யோஷித:" என்கிற ச்லோகம் காணப்படுகிறது. இதன் பொருள் எளிதாகத் தெரியுமே. இந்த ச்லோகத்தை இவர் பாராயணம் செய்து வருகிருரா, ப்ரக்ஷிப்த மென்கிருரா? சில மாதரசிகளின் கூட்டத்தில் இவர் ஸ்ரீராமாயணப்ரவசநம் செய்து வருகிருரென்றும் அப்போது இந்த ச்லோகத்தை வெகு கோலாஹலமாய் விவரிக்கிருரென்றும் (வர்த்தமான) இளையவில்லி ஸ்வாமி சொல்லக் கேட்டிருக் கிறேன். அது எப்படியாவது ஆகுக. திவ்ய ப்ரபந்தங்களிலும் தத்வ்யாக்யானங் களிலுமுள்ள ச்ருங்காரரஸ கீர்த்தனங்கள் இப்படிப் பட்டவை யல்ல. *அஞ் சிறைய மடநாராய் ஈட்டுப்ரவேசத்தில் அருளிச் செய்த அர்த்த விசேஷங்களை நம்முடைய திவ்யார்த்த தீபிகையில் விளக்கியுள்ளோம். அவை வருமாறு. "முற்காலத்தில் ஸாமாந்யனாயிருப்பானொருவன், விரக்தர்களும் வைதிகர்களுமான மஹான்கள் பலரும் திருவாய்மொழியைப் பரிக்ரஹிக்கையாலே இது தத்வபரமா யிருக்குமென்று கருதி இத்திவ்யப்ரபந்தத்தை அதிகரித்து வந்து இத்திருவாய் மொழியில் வந்தவாறே "இது காமுகவாக்யமாயிருக்கின்றது!' என்று உபேக்ஷித்து விட்டுப் போனானும். வேதாந்தங்களில் விதிக்கப்படுகிற பகவத்காமமே இப்படிப் பட்ட பாசுரங்களாகப் பரிணமித்ததென்று அவன் அறிந்திலன் கருவிலே திரு விலாமையாலே—என்று நம்பிள்ளை மிக வருந்திப் பேசுவர்.

வேதாந்தவாசிரியர் "பாஞ்சாலீகாத்ர சோபாஹ்ருத ஹ்ருதய வதூவர்க பும்பாவநீத்யா பத்யௌ பத்மாஸஹாயே ப்ரணயிநி பஜத: ப்ரேயஸீ பாரதந்த்ர்யம், பக்தி: ச்ருங்கார வ்ருத்த்யாபரிணமதி முநே: பாவபந்தப்ரதிம்நா யோகாத் ப்ராகுக்தபாவஸ்திதிரிஹ விரஹோ தேசிகாஸ் தத்ர தூதா:." என்று த்ரமிடோபநிஷத்தாத்பர்ய ரத்நாவளியிலும், "போக்தும் தவ ப்ரியதமம் பவதீவ கோதே பக்திம் நிஜாம் ப்ரணயபாவநயா க்ருணந்த:. உச்சாவசைர்விரஹஸங்கமஜைருதந்தை: ச்ருங்காரயந்தி ஹ்ருதயம் குரவஸ் த்வதீயா:" என்று கோதாஸ்துதியிலுமருளிச் செய்தவை இங்கு ஸ்மரிக்கத்தக்கன".

இந்த ச்லோகங்களெல்லாம் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யான ஸ்ரீ ஸூக்திகளின் அந்யூந அநதிரிக்த அநுவாதரூபங்களென்பதைப் பலகால் விளக்கியிருக்கிறேன்.

## ப்ரஹ்மஸ்ரீயின் அநந்வித பாஷணங்கள்

எழுதுகிறார் இவர்.—"தமிழ்மொழியில் சில தனியான கருத்துக்கள் காணப் படுகின்றன. அதைப் பின்பற்றித் திருப்பாவைக்குப் பொருள் கூறுவதே நியாயம். தமிழ் நாட்டு வரலாற்றோடு இணைந்துள்ள திருப்பாவையை அதினின்றும் வேறு படுத்திப் பிறநூல்கள் உதவியைக் கொண்டு விளக்கம் கூறுவது ஏற்கக் கூடியதேயில்லை" என்று. இதற்குச் சொல்லுகிறோம். இவருடைய நெஞ்சிலுள்ளது என்ன, எழுத்தில் வெளிவருவது என்ன, யாரேனும் கண்டு பிடிக்க முடியுமா? இந்த வாக்யத்தின் முடிவு "ஏற்கக் கூடியதே இல்லை" என்பது. இப்படியொரு தமிழ்ச் சொல் உண்டா? 'ஏற்கக்கூடியதன்று' என்றோ 'ஏற்கக்கூடியதல்ல' என்றோ எழுதலாம். "ஏற்கக்கூடியதே இல்லை" என்றால் சிறுவர்களும் சிரிப்பர்கள். நையாயிகர்கள் அபாவத்தை நான்காகப் பிரித்து ப்ராகபாவ மென்றும் ப்ரத்வம்ஸாபாவம் என்றும் அத்யந்தாபாவ மென்றும் அந்யோந்யாபாவ மென்றும் வழங்குவர். அத்யந்தாபாவ ப்ரத்வம்ஸாபாவங்களுக்கும் அந்யோந்யாபாவத்திற்கும் சிறிதும் வாசியறியாதவிவர் எழுதப் புகுந்ததே ஆச்சரியமானது. "இங்கே துணி இல்லை" "இங்கே தண்ணீர் இல்லை" என்று எழுத வேண்டுமிடத்து "இங்கே துணியன்று" "இங்கே தண்ணீர் அன்று" என்றெழுதுவது போலவும், "இது மரமன்று" என்ன வேண்டுமிடத்து "இது மரமில்லை" என்றெழுதுவது போலவும் அஸம்பத்தமாக எழுதிக்கொண்டு போகிற இவருடைய வார்த்தைகளை எடுத்துக்காட்டவும் லஜ்ஜிக்கிறோம். ஸ்ரீ வைஷ்ணவஸுதர்சன பத்ராதிபர் "இவர் அரிச்சுவடி கூட வாசியாதவர்" என்றெழுதியிருப்பதானது உண்மையுரை. ஸர்வாத்மநா ஸத்யம். சப்தங்களோடு அர்த்தங்களோடு வாசியற இவருடையவை எல்லாம் அஸமஞ்ஜஸம். இதை எத்தனை தடவை எழுதினாலும் புநருக்திதுஷ்டமாகாது. "நீர் அரிச்சுவடி வாசித்து விட்டு எழுதப் புறப்படும்" என்று சொல்லி நிறுத்தி விடவேண்டும் நாம் இக்கட்டுரையை. ஆனாலும் உலகம் வஞ்சிக்கப் படாமலிருக்க வேண்டுமென்ற கருத்துடனே எழுதிவருகிறோம்.

## ப்ரஹ்மஸ்ரீயின் அபசப்தபுஞ்ஜங்கள்

"ஆண்டாள் பகவதனுபவம் பண்ண கண்ணனுடைய காலத்தில் நடந்த ஸம்பவத்தை ஸாதனமாகக் கொண்டு அதை மனதார அநுபவித்து அந்த அநுபவத்தை திருப்பாவை மூலம் வெளியிடுகிருள் என்பது திண்ணம்........" இதை அடியோடு மறந்து 3000 படி 6000 படி வியாக்யாதாக்கள் ..........அனுகரித்துத் தரிப்பார் என்பது மூலத்திலில்லாத மூலத்திற்குப் பொருந்தாத கல்பனை." என்றெழுதுகிருர் ப்ரஹ்மஸ்ரீ. இவரை ஒரு ஸதஸ்ஸில் வரவழைத்து "இந்த பங்க்திகளின் பொருளைச் சொல்லுமையா" என்று வினவினுல், இவரும் அதற்கு இசைந்து வந்து பேசினுல் அப்போது இவருடைய வ்யுத்பத்திச் சாயம் வெளியாகும். இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு முன்பு இந்த புநர்வஸு பத்ரிகையிலேயே "திருப்பாவையின் வாஸ்தவார்த்தம்" என மகுடமிட்ட கட்டுரையொன்றைக் காலஞ்சென்ற D. T. தாதாசார்யர் வெளியிட்டிருந்தார். அதற்கு உ. வே. வித்வான் P. R. நரஸிம்ஹாசார்யர் ஸ்வாமி "திருப்பாவையபார்த்த திரஸ்காரம்" என்னும் நூலை அப்போதே அச்சிட்டு வெளியிட்டார். அதற்கு மதிப்புரையை விரும்பி நமக்கனுப்பியிருந்தார். ஸ்ரீ ராமாநுஜன் 261-ல் "புஸ்தக விமர்சனம்" என்கிற மகுடத்தின் கீழ் நாம் எழுதியிருப்பதை இங்கநுவதித்துக் காட்டுவதொன்றே போதும். அது வருமாறு.

திருப்பாவை யபார்த்த திரஸ்காரம் என்னும் பெயர் பூண்டதொரு புத்தகம் விமர்சனத்திற்கு நம்மிடம் வந்திருக்கிறது. ஸமீபகாலத்தில் வெளிவந்த திருப்பாவை வாஸ்தவார்த்தம்-(உள்ள பொருள்) என்ற சிறுசுவடியை நீறுநீருக்கிப் பாறு பாருக்கி யொழிப்பது இந்த திவ்ய க்ரந்தம். T. நகர். வித்வான் P. R. நரஸிம்ஹாசாரியர் ஸ்வாமி நூலாசிரியர். D. T. T. வாஸ்தவார்த்தமென்று பெயரிட்டு அஸப்யங்களும் அஸமஞ்ஜஸங்களுமான சப்தங்களையும் அர்த்தங்களையும் நிரப்பி யிருப்பதாக நிபுண நிருபணங்கள் செய்திருக்கிருர். அதிலிருந்து சிலவற்றை ஈண்டெடுத்துக் காட்டுகிறேன்.

அட்டையில், "வ்யங்க்யம்" என்று தொடங்கி, "சொல்லின் நேர்பொருளாயிராமல் அதிலிருந்து தோற்றுவிக்கப்பட்ட பொருள் வ்யங்க்யப் பொருள். உதாரணம்; ஒரு பெரியவரைப் பார்த்து 'இவர் பகவான்' என்ருல் அதற்கு ஸ்ரீமந் நாராயணனென்பது முக்கியமான பொருள்; ஆனுல் அப்பொருளை விட்டு லக்ஷணயா நாராயணனைப் போன்றவர் என்ற பொருளையுணர்த்தும்; அதிலிருந்து "இவரை வணங்கு, அதனுல் க்ஷேமமுண்டாகும்" என்ற கருத்துத் தோன்றுகின்றது. இது வ்யங்க்யமாகும்" என்று எழுதப்பட்டிருக்கிறதாம். இது திரஸ்கார நூலில் வெகு நேர்த்தியாக மறுக்கப்பட்டுள்ளது. *கதிரவன் குணதிசைச் சிகரம் வந்தணைந்தான்* என்பதில் குளத்திற்குப் போகச் சொல்லுவதும், வயலுக்குப் போகச் சொல்லுவதும், காபிகுடிக்கச் சொல்லுவதும் வ்யங்க்யம் என்பதோடொக்குமிது-என்கிருர் திரஸ்காரகாரர். ஸ்ரீபாஷ்யோபக்ரமம் "பகவத் போதாயந க்ருதாம்" என்பது. இங்கு பகவச் சப்தத்தைக் கேட்டுக் கைகூப்புவாராருமில்லை;

7

குருகூர்ச்சடகோபனென்று செவிப்பட்டவாறே "யந்மண்டலம் ச்ருதிகதம் ப்ரண மந்தி விப்ரா:" என்கிறபடியே உலகமெல்லாம் கையெடுத்துக் கும்பிடுகிறது. இங்கு வ்யங்க்ய மென்கிற பேச்சே கிடையாது—என்று நன்கு விளக்கியுள்ளார் திரஸ்காரகாரர்.

திருப்பாவையில் ஒரு பாட்டில் ஒருத்தியைக் 'கோவலர்தம் பொற்கொடியே!' என்றழைக்கிறார்கள்; மற்றொரு பாட்டில் வேறொருத்தியை 'நற்செல்வன் தங்காய்!' என்றழைக்கிறார்கள். ஓரிடத்தில் கோவலரென்கிற பன்மையும், மற்றோரிடத்தில் நற்செல்வனென்று ஒருமையும் இருப்பதாகக் காட்டி இவற்றிலிருந்து ஏதோ வ்யங்க்யார்த்தம் தோன்றுவதாக எழுதியிருக்கிறதாம் அபார்த்தச் சுவடியில். இதற்கு திரஸ்கார நூலில் கொடுத்திருக்கிற சாட்டை இன்சுவை மிக்கது. (அதாவது) பெரியதிருமொழி முதற்பாட்டில் ஓரடியில் வாடினேனென்றார்! மற்றோரடியில் கூடினேனென்றார்; இன்னோரடியில் ஓடினேனென்றார்; வேறோரடியில் நாடினேனென்றார்; இவற்றுக்கு அபார்த்தஜநகர் வ்யங்க்யம் ஸாதித்தாராம். வாடினேன் வாடியென்றதற்கு *வாடிவாடுமிவ்வாணுதலேயென்ற நம்மாழ்வாருடைய வாட்டம் வ்யங்க்யம்; கூடினேன் கூடியென்றதற்கு* கூடிக்கூடியுற்றார்களிருந்து என்று பெரியாழ்வார் காட்டின கூட்டம் வ்யங்க்யம். ஓடினேனோடியென்றதற்கு * ஓடியோடிப் பலபிறப்பும் பிறந்தென்று நம்மாழ்வார் காட்டின ஓட்டம் வ்யங்க்யம்; நாடினேன் நாடியென்பதற்கு ப்ரத்யாஹாரந்யாயேந நார்மடி வ்யங்க்யம். பலர் திருமொழி தொடக்கத்திற்கு நார்மடி சாத்திக்கொண்டு செல்வதுமுண்டு என்று சொல்லி வ்யங்க்யங்கள் வகுத்தாராம். அவருடைய திறமையை வென்று விட்டது இந்த அபார்த்தக் குடுக்கையின் திறமை என்று விரிவான விளக்கம் காட்டியிருக்கிறார் திரஸ்காரகாரர்.

மற்றொன்றும் மிக்க சுவைமிக்க நிருபணம். (அதாவது) *பத்தி முதலாமவற்றில் பதியெனக்குக் கூடாமல்* என்கிற அடைக்கலப்பத்துப் பாட்டுக்கு இவர் வ்யங்க்யார்த்தம் கூறினாராம்; ஒரு ஸ்வாமிக்கு மூன்று தேவிகளாம்; ஒருத்திக்கு பக்தியென்றும், மற்றொருத்திக்கு சக்தியென்றும் இன்னொருத்திக்கு முக்தி யென்றும் பெயராம். இம்மூவர்க்கும் பதியான ஸ்வாமி இவர்களோடு கூடாமல் எத்திசையுமுழன்றோடினாராம். இக்கதை பத்திமுதலாமவற்றில் பதியெனக்குக்கூடாமல் என்றதற்கு வ்யங்க்யம். முதலாமென்ற ஆதிசப்தத்தாலே பக்தி யென்பவளுக்கு ஸபத்நிகளான சக்திமுக்திகளை க்ரஹிக்கவேண்டுமாம். பதி யெனக்கு என்றவிடத்தில் பதியென்றது வடசொல்லாய் பர்த்தாவைச் சொல்லுகிறதாம். அவர் மனைவிகளோடு கூடாமற்போனதை ஒவ்வொருத்தியும் "பதி யெனக்குக் கூடாமல் எத்திசையுமுழன்றோடுகிறார்" என்கிறாளாம். இந்த மஹார்த்தம் அந்தப் பாட்டுக்கு வ்யங்க்யமென்று திருமாமணிமண்டபத்தில் ப்ரஸங்கமாம். ப்ரபல கரகோஷமாம். இப்படி அற்புதமான அனேகவிஷயங்கள் திரஸ்கார நூலில் திகழ்கின்றன. ப்ராஜ்ஞ ரஸிகர்களுக்குப் பஞ்சாம்ருதம்போன்றது இந்நூல். (இதுவரை பழைய கட்டுரை)

அந்தநூலை முழுவதும் வாசித்துப் பார்த்தால் இந்த ப்ரஹ்மஸ்ரீயின் அபசப்தங்களெல்லாம் தலைமடியும்.

## ஸ்ரீ ஸ்தனத்திலும் பூ ஸ்தனத்திலும்

ப்ரஹ்மஸ்ரீயின் அச்லீல வாக்யராசிகளில் காபேயமான இந்த வாக்கியங் களைக் கேளீர். "ஸ்ரீ ஸ்தனத்திலும் பூ ஸ்தனத்திலும் மக்னனுனபடி" இத்யாதி. இது ஏற்கெனவே உதாஹ்ருதம். பட்டர் அருளிய தனியனில் "நீளாதுங்கஸ்தந கிரிதடீஸுப்தம்" என்றிருப்பதைப் பரிஹஸிக்கிற இவர் ச்லோகார்த்தத்தையே உள்ளபடி க்ரஹிக்கவில்லை. "ஸ்ரீஸ்தனத்திலும் பூஸ்தனத்திலும்" என்று இரண்டாக எழுதுவதற்கு என்ன மூலமிருக்கிறது? தனியனில் நீளாஸ்தநமே கிரிதடியாகச் சொல்லப்பட்டுள்ளது. பூஸ்தன மென்று மலைக்குப் பெயர். "காரார் வரைக் கொங்கை" என்றும் "தென்னனுயர் பொருப்பும் தெய்வவடமலையும் என்னு மிவையே முலையா வடிவமைந்த" என்றும் மலையை பூமிப் பிராட்டியின் ஸ்தநமாகத் திருமங்கையாழ்வார் அருளிச் செய்துள்ளார். இதைக் கவிகளுடைய நூல்களிலும் நிகண்டுக்களிலும் காணலாம். ஆகவே "ஸ்ரீஸ்தனமாகிற பூஸ்தனத்தில்" என்றிவர் எழுதியிருந்தால் ஒருவாறு பொருந்தும். ஆண்டாள் திருப்பாவையில் "நப்பின்னை நங்காய் திருவே துயிலெழாய்" என்று நப்பின்னையை ஸ்ரீ மஹாலக்ஷ்மியாகக் கூறியிருப்பதனுல் 'ஸ்ரீஸ்தந பூஸ்தநத்தில்' என்றெழுதியிருந்தால் அது சாடுக்தி யாகும். ரஸலேசமுமற்ற இவரது இந்த பங்க்தியை விட்டுத் தொலைப்போம்.

## ஆத்மா ஆணுமல்ல பெண்ணுமல்ல

இந்த ப்ரஹ்மஸ்ரீயின் அஸங்கதப் பேச்சுக்களில் "ஆத்மா ஆணுமல்ல பெண்ணுமல்ல" என்பதும் ஒன்று. ஆத்மாவுக்குப் பிறப்பு இல்லை, தேஹத்திற்கே பிறப்புள்ளது என்பது கீதாசாஸ்த்ர நிர்ணயம். ஆத்மாவுக்கும் ஜந்மமரணங்க ளுண்டென்பதை [அதாவது ஸத்தாஹாநிகள் உண்டென்பதை] நம்முடைய தைத்திரியோபநிஷத்து தெரிவிக்கின்றது: "அஸந்நேவ ஸ பவதி..........ஸந்த மேநம் ததோ விது:" இத்யாதி. இதில் ஸ: என்பதும் ஏநம் என்பதும் ஜீவாத் மாவைக் குறிப்பதே யன்றி தேஹத்தைக் குறிப்பதன்று. "சரீரமேவ மாதா பிதரௌ ஜநயத: ஸ ஹி வித்யாதஸ்தம் ஜநயதி தத் ச்ரேஷ்டம் ஜந்ம" இத்யாதி மஹர்ஷி ஸூத்ரங்களை யடியொற்றி ஆசார்யஹ்ருதயத்தில் "வித்யை தாயாகப் பெற்று...........மணிவல்லிப் பேச்சு வந்தேறியன்று" என்னும் மிகப் பெரிய சூர்ணை அவதரித்துள்ளது. அதனுல் ஆத்மாவுக்கு ஸத்ரீத்வமே இயற்கையாகவுள்ளது என்று ஸ்தாபிக்கப்பட்டுள்ளது. இது வெறும் வித்வான்களுக்குப் புரியாது. ரஸிக வித்வான்களுக்கே புரியும்.

<u>உலகத்தவருக்குப் பொதுவாக ஏற்படாது</u>:— நாம் தெளிவாக உணர வேண்டிய தத்வஹித புருஷார்த்தங்களில் கைங்கர்யமே பரம புருஷார்த்த மென்னும் பொருளை ஆண்டாள் திருப்பாவையினுல் உணர்த்துகிருள். இதை ஸ்ரீ பாஷ்யத்திலுல் வெளியிட முடியாமைக்கு வருந்திய எம்பெருமானுர் கத்யமருளிச் செய்து வெளியிட்டருளினுர். அதில் "கைங்கர்ய ப்ராப்த்யபேக்ஷயா" என்றும் "நித்யகிங்கரோ பவாநி" என்றும் "நித்யகிங்கரேர பவ" என்று முள்ள

ஸ்ரீஸூக்திகளையும் தூஷிக்கின்ற விவர்க்கு யாரே ஹித முரைப்பார்? "அப்படியே இருந்தாலும் நந்தகோகுல கன்னிகைகளுக்குத் தான் இந்தப்ரார்த்தனையே தவிர உலகத்தவருக்குப் பயன் படாது.'' — இத்தகைய அபசப்தங்கள் ஸ்ரீ வைஷ்ணவ கோஷ்டியில் பரிமாறுமவையல்ல. மேல்வரிக்குக் கீழ்வரி முரணாகவும் அந்தவரிக்கு அடுத்தவரி முரணாகவும் இப்படி அஸங்கதப் பேச்சுக்களையே நிரப்பியுள்ள விவர்க்கு இன்னமும் எழுதுகிறோம்.

"இங்கு யாருக்கு மரணம்?"—இந்த அஸமஞ்ஜஸக்குடுக்கை "இங்கு யாருக்கு மரணம்" என்று ஒரு கேள்வி கேட்கிறது. ஆசார்யர்கள் உதாஹரித்த ச்லோக மொன்று "விவாஹகாலே" என்று தொடங்குவது. அதைக்கொண்டு "இங்கு யாருக்கு விவாஹம்?" என்று கேட்கத் தெரியாமல் "யாருக்கு மரணம்?" என்று கேட்கிறவிவர்க்குத் தகுந்த விடை என்ன வென்றால் "திருப்பாவையைத் தூஷிக்கிற ஆத்மாக்களுக்கெல்லாம் மரணம்" என்பதேயாகும்.

'5' என்று லக்கமிட்ட அபத்தப்பேச்சுக்கு விடை:— ஆழ்வார்களுடைய ஸ்ரீஸூக்திகளுக்கும் ஆண்டாளுடைய ஸ்ரீஸூக்திகளுக்கும் எவ்விதமான வாசியும் கிடையாது. திருவாய்மொழியில் (9-9) "மல்லிகைகமழ்தென்றலீருமாலோ" என்கிற பதிகமும், (10-3) வேய்மரு தோளிணை மெலியுமாலோ "என்கிற பதிகமும் ஆண்டாளுடைய அநுபவங்களுக்கு ஒருபுடை ஸ்மாரக மானவை. மேலே குறித்த இரண்டு பதிகங்களிலும் முடிவில் "அவனை விட்டகன்றுயிராற்றகில்லா அணியிழை யாய்ச்சியர் மாலைப்பூசல்" என்றும் "மங்கையராய்ச்சியர் ஆய்ந்தமாலை அவனொடும் பிரிவதற்கிரங்கி" என்றும் அருளிச் செய்யப்பட்டுள்ளது. அது போலவேதான் திருப்பாவையின் இறுதிப்பாசுரமும் அமைந்துள்ளது. குருமுகமாகக் கேட்டறிய வேண்டிய சீரிய பொருள்களைச் சிறிதும் உணரகில்லாமல் பொருளற்ற பேச்சுக்களைப் பொழிகின்ற விவர்க்கு என்ன எழுதுவது! ஈதொன்று கேளீர்! கோபிகள் கண்ணபிரானோடு ஊடல் ரஸம் கொண்டாடினார்கள். (அதாவது ப்ரணயரோஷாநுபவம்) இதைத் திருமங்கையாழ்வார், குலசேகராழ்வார், நம்மாழ்வார் ஆகிய மூவர் ஸ்வானுபவத்தால் பேசி யுள்ளார்கள். பெரிய திருமொழியில் (10-8) காதில் கடிப்புப்பதிகத்தில் (10) "அல்லிக்கமலக் கண்ணனை அங்கோ ராய்ச்சி எல்லிப் பொழுதூடிய ஊடல் திறத்தை கல்லின்மலிதோள் கலியன் சொன்ன" என்று தலைக்கட்டப்பட்டது. குலசேகரப் பெருமாள் * ஏர்மலர்ப் பூங்குழல் பதிகத்தின் முடிவில் "இளவாய்ச்சிமார்கள் எல்லிப் பொழுதினிலேமத்தூடி யெள்கியுரைத்த உரையதனை.......குலசேகரன்" என்று தலைக்கட்டினார். திருவாய்மொழி ஆறும் பத்தில் * மின்னிடைமடவார் பதிகம் இதே வகையில் ப்ரணயரஸாநுபவம். அதுவும் ஆய்ச்சிகளின் அனுபவானுகாரமே யென்பது ஸ்பஷ்டம். ஆனால் அங்கு இறுதிப் பாசுரத்தில் இதைக்காட்டாமல் ஆய்ச்சிகளின் ப்ரஸ்தாவமேயில்லாமல், "குருகூர்ச் சடகோபன் ஏத்திய தமிழ் மாலை" என்றே தலைக்கட்டப்பட்டது.

பெரியாழ்வார் திருமொழியில் ஓரற்புதம் கேளீர்! *வண்ணமாடங்கள் சூழ் என்று தொடங்கி தாமான தன்மையில் க்ருஷ்ணவதார ஸமஸமய கோலாஹலங்

களைப் பேசி வருகிறார் ஆழ்வார். அதில் இறுதிப்பாசுரத்தில் "மன்னுநாரணன் நம்பி பிறந்தமை மின்னுநூல் விட்டுசித்தன் விரித்த" என்று தாமே பாடியதாகத் தலைக் கட்டினார். இடையில் ஒன்பதாவது பாசுரம் அமைந்த அதிசயத்தை யாரே அறிவார்! (அதாவது) "கிடக்கில் தொட்டில் கிழிய உதைத்திடும், எடுத்துக் கொள்ளில் மருங்கையிறுத்திடும், ஒடுக்கிப்புல்கில் உதரத்தே பாய்ந்திடும், மிடுக்கிலாமையால் நான் மெலிந்தேன் நங்காய்." என்கிற பாசுரம் உள்ளது. இது யசோதையின் கூற்றே யொழிய ஆழ்வார் கூற்றன்று. கீழே எட்டுப்பாசுரங்களும் ஆழ்வாருடைய திருவாக்கு. இது ஒன்று மட்டும் யசோதையின் வாக்கு. மேலே சீதக் கடலென்கிற திருமொழியின் முடிவில் "அசோதை முன் சொன்ன திருப்பாத கேசத்தை" யென்கிறார். இங்கோ அப்படியில்லை. ஆழ்வார் தாமே ஒரு க்ஷணத்தில் யசோதையாக மாறி விட்டார். இத்தகைய மருமங்களை யறிந்தே ஸ்ரீவசந பூஷணத்தில் "பெரியாழ்வாரும் திருமகளாரும் கோபஜன்மத்தை ஆஸ்தானம் பண்ணினார்கள்." என்றருளிச் செய்யப்பட்டது. இதிஹாஸ புராணங்களை யெழுதின ரிஷிகள் கதைகளை மட்டும் எழுதிப் போந்தார்கள். ஆழ்வார்கள் கதை சொல்ல வந்தவர்களல்லர். யசோதை சொல்லுவதாகவும், தேவகி சொல்லுவதாகவும் கோபிகள் சொல்லுவதாகவும், பாசுரங்கள் காணப்படினும் அவர்களின் பாசுரத்தை அனுவதித்த மாத்திரமேயன்று. இதையெல்லாம் ஸர்வாத்மநா திவ்ய ப்ரபந்தவைதேசிகரான இவரை நோக்கியா நாமெழுதுவது! ஶ்ருங்காரரஸ ஸம்பந்தமில்லாத திருவந்தாதிகளோடு இவர் நிற்கட்டுமே. தொண்டரடிப் பொடியாழ்வாரையும் திருப்பாணாழ்வாரையும் சேர்த்துப் போற்றட்டுமே. திருமங்கையாழ்வார் திருநாகையழகியாரை அனுபவிக்கையில் முதலடியிலேயே "என்னையும் நோக்கி யென்னல்குலும் நோக்கி ஏந்திளம் கொங்கையும் நோக்குகின்றார் அன்னை யென்னோக்கு மென்று அஞ்சுகின்றேன்" என்கிறார். இந்த ப்ரஹ்மஸ்ரீ பழிக்கப் போகிறார் என்ற காரணத்தினாலும் அஞ்சுகிறார் போலும்!

## 6 என்று லக்கமிட்ட அபத்தப் பேச்சுக்களுக்கு விடை

"ப்ராஹ்மணியாய் இருந்து..........." என்று தொடங்கி இவர் எழுதி வருகையில் 'அது தவறு' என்றும் 'இது சேராது' என்றும் எழுதுமவை ப்ரலாப மாத்ரம். "திருவடி தாமரை போன்றது" என்ற வார்த்தையைக் கேட்ட உடனே ஒருவர் திருவடி தடாகத்தில் முளைக்கவில்லை, சேற்றில் முளைக்கவில்லை, தாமரை இலைகளின் இடையே இல்லை. ஆகவே திருவடிக்குத் தாமரையை ஒப்புச்சொல்லுவது தகாது என்றார். சந்திரனை யொத்தது திருமுகம் என்றதைக் கேட்ட ஒருவர் முகத்துக்கு ஒருநாளும் க்ரஹணம் பிடிப்பதில்லை யாகையாலும் சுக்லபக்ஷக்ருஷ்ண பக்ஷங்களில் ஏற்படுகிற ஏற்றக்குறைவுகளும் இல்லாமையாலும் முகத்துக்குச் சந்திர திருஷ்டாந்தம் சொல்வது தகாது என்றார். அவர்களின் பக்கத்தில் இவரும் நிற்கட்டும். இங்கு அநவஸரமாக சூத்ரசப்த ப்ரயோகம் பண்ணி நரகப் படுகுழியில் விழுகிறார் இவர். இவரைக் கைகொடுத்துத் தூக்க எந்த ப்ரஹ்மஸ்ரீ வருவரோ?

7B

7 திருவாய்ப்பாடியில் என்று தொடங்கும் வாக்யத்தில் "முதுறசி" என்றும் "கொற்றம்" என்றும் சில அவச்சொற்கள் காணப்படுகின்றன. முதுறசி என்கிற சொல் எந்த நாட்டில் வழங்குவதோ! அது அச்சுப்பிழை; முதுர்ச்சி என்றிருக்க வேணுமென்ருலும் அதுதான் எந்த நாட்டில் வழங்குவதோ ? கொற்றம் என்பது வெற்றிக்கு வாசகம். கொற்றம் வந்துவிடாது என்று எழுதுகிறவிவரை யாருக்கு வெற்றி வந்துவிடாதென்கிறீரென்று கேட்கவேணும். ஒரு மாப்பிள்ளை மாமியா ரகத்துக்குச் சென்ருர். மாமி கூழ் கொடுத்தாள். அதைக்குடித்த மாப்பிள்ளை அம்மாமி கூழ் 'டிட்டிக்கிறது' என்ருர். தித்திக்கிறதென்று சொல்லத் தெரிய வில்லையே என்று பரிஹஸிக்கிற மாமியார் மாப்பிள்ளை வாய் 'டொட்ட'மாய் இருக் கிறதென்ருள். ஸ்பஷ்டமாயிருக்கிறதென்று சொல்லத் தெரியவில்லையே என்று வருந்திய மாமனர் 'டண்டுண்டண்டே' என்ருர். இரண்டுபேரும் இரண்டு ஸ்பஷ் டங்கள் என்று அதற்கு அர்த்தமாம். அப்படியே இந்த ப்ரஹ்மஸ்ரீயின் அவலக்ஷணப் பேச்சுக்களுக்கு ஒரு வ்யாக்யானம் ஏற்பட வேண்டும்.

8 என்று லக்கமிட்ட அபத்தப்பேச்சுக்களுக்கு விடை: இந்த ப்ரஹ்மஸ்ரீ இரண்டுவரி எழுதிவிட்டு அது கல்பனை, இது அவசியமற்ற கல்பனை என்றெல்லாம் எழுதிப் போருகிருர். ஸம்ச்லேஷம், ஸம்யோகம் இத்யாதி பதங்களுக்கு மிதுனீ பாவந்தான் அர்த்தம் என்று கொண்டிருக்கிற இந்த மேதாவியைத் தெளிவிக்க யாரே வல்லார்? உலகத்தில் ப்ரஜாபதி என்கிற சொல்லை க்ராம்யமாக வழங்கி வருகிருர்கள் சிலர். 'ப்ரஜாபதிச்சரதி கர்பே அந்த:' என்கிற வேதவாக்யத்தை மேலான ஆதாரமாகக் காட்டுகிருர்கள் அவர்கள். இவர்க்கும் இத்தகைய ஆதாரங்கள் பல கிடைக்கக்கூடும்.

9 என்று லக்கமிட்ட அபத்தப் பேச்சுக்கு விடை: திருப்பாவை வியாக்கியான ஸ்ரீஸூக்தி எவ்விதமாகவுள்ளது, எந்த ப்ரகரணத்தில் என்னவுள்ளது என்ப தொன்றையும் சிறிதும் காட்டாமல் "திருப்பாவையே அர்த்தமற்றதாகிவிடும்" என் றெழுதுகிற விவரை நோக்கி ஒன்றே கேட்கிருேம். திருப்பாவை அர்த்தமற்றதாகி விட்டால் உமக்கு என்ன நஷ்டம் என்று. நம்முடைய யஜுர்வேதத்தில் 6வது காண்டம் தொடங்கும்போது "கோஹி தத் வேத யத்யமுஷ்மிந் லோகே அஸ்தி வா ந வேதி"—என்றொரு வாக்கிய முள்ளது. இதனுல் மேலுலகத்தி லொன்றுமே இல்லை என்று தெரிவிக்கப்படுகிறது. இதனுல் வேதம் முழுவதும் அர்த்த மற்ற தாகி விடுகின்றதென்று சிலர் சொல்லிக் கொண்டிருக்கிருர்கள். "ஸுவர்கம் லோகமேதி "ஸுவர்கமேவ லோகம் அபிஜயதி" என்றிப்படிப் பதினயிரம் தடவை முறையிடுகிற வேதம் "மேலே ஒன்றுள்ளதென்று யார் கண்டார்?" என்ருல் இதற்கு என்ன அர்த்தம்? அனர்த்தம்தான் அர்த்தம்

10 லக்கமிட்ட அபத்த வாக்கியராசியில் "அர்ஜுனன் சரமச்லோகம் கேட்டு தரித்தான். திருப்பாவையில் அவ்விதம் பகவான் ஒன்றும் கூறவில்லை" என்றுள்ளது. இது அனன்விதமான பேச்சு. அர்ஜுனன் தரித்தானென்று இவர் எது கொண்டறிந்தார்? "நூநம் அச்ரத்ததானேஸி துர்மேதாஸ் சாஸி பாண்டவ!, அபுத்த்யா யந்நஜாநீஷே தந்மே ஸுமஹதப்ரியம்" என்று கண்ண பிரான் நொந்து சொன்ன பேச்சு உத்தர கீதையில் ப்ரஸித்தமாயுள்ளது. அர்ஜுனன் நான் யுத்தம் செய்யமாட்டேனென்ற போது அவனைக் கீழே தள்ளி விட்டு பீமஸேனதிகள் நால்வரும் யுத்தம் செய்து வெற்றி பெற்ருர்கள் என்றும் கீதை யென்பதொன்று அவதரிக்கவேயில்லை யென்றும் இவருடைய தாயாதிகள் எழுதியிருக்கிருர்கள். அது இவர்க்குத் தெரியாதுபோலும்! இனியாவது தெரிந்து கொண்டு அந்த வாதத்தைக் கிளப்பிக் காலம் கழிக்கட்டும்.

11 என்று லக்கமிட்ட வார்த்தைகளின் அஸமஞ்ஜஸத்தனம் மிகமிக அருவருக்கத்தக்கது. "நான் உன்னை உன்னாலே கேட்டு எப்போதும் இப்போதும் அப்படியாக இருந்து விடாமல் இப்படியும் அப்படியும் இருந்து வருகிறேன்." என்று ஒருவன் எழுதினால் இதற்கு என்ன அர்த்தமோ அதுதான் இவருடைய வரிகளுக்கெல்லாம் அர்த்தமென்னத் தட்டில்லை. பெரியாழ்வார் திருமொழியில் (5-3-3) "உனக்குப்பணி செய்திருக்குந்தவமுடையேன் இனிப்போயொருவன் தனக்குப் பணிந்து கடைத்தலைநிற்கை நின்சாயை அழிவுகண்டாய்." — என்கிற பாசுரத்தின் பொருளை ஸ்ரீமதாண்டவன் ஸந்நிதியில் ஸவிநயம் கேட்டறிந்து தெளிவுபெறுவாராக. "இவளுடைய தகப்பனர் புத்ரபாவத்தை அனுபவித்தார்." நம்மாழ்வார் நாயகபாவத்தை அனுபவித்தார்." என்றெழுதுகிற இந்த மேதாவியின் அஸம்பத்த சப்தராசிகளை எவ்வளவு பார்ப்பது! எவ்வளவு எழுதுவது!! நம்மாழ்வார் திருவிருத்தத்தில் "வம்பார்வினைச் சொல்லவோ எம்மை வைத்ததிவ் வான் புனத்தே" என்கிறார். அந்தப் பாடு படுகிறோம் நாம். வேதத்தில் (7-4ல்) அம்பாவுக்கும் அம்பாலிக்கும் அம்பிகைக்கும் உண்டான பாவங்களைப் பேசிக் கொண்டு போது போக்க வேண்டிய விவர் ஏதுக்கு அஸ்தானே கைவைத்துத் திண்டாடுகிறார் என்று தெரியவில்லையே!

கடைசியாக 12 லக்கமிட்ட பாராவை முடிக்கின்ற விவர் "கருணையாலேயே தேவதை பலம் கொடுக்கிறது" என்று தமது கட்டுரையை முடித்துள்ளார். இதை மறுத்து யாரேனும் சொன்னதுண்டோ? யாரேனும் எழுதி வைத்திருப்பதுண்டோ? இவருடைய உபக்ரமமென்ன? உபஸம்ஹாரமென்ன? என்று கேட்டால் திசைதொறும் விழிப்பர். நான்முகனாய் அல்லது திசைமுகனாய் ஸேவை ஸாதிப்பர்.

## — உபஸம்ஹாரம் —

வரும் தபால்களையும் பத்திரிகைகளையும் புத்தகங்களையும் வாசிப்பதும், எழுதுவதுமெல்லாம் ஒரு வருஷகாலமாகப் பராதீனமாகவே நடந்து வருகிறது அடியேனுக்கு. நேத்ர சிகித்ஸை செய்துகொள்ளவேண்டிய நிலைமையில் ஒரு வருஷமாகவே யிருந்துவருகிறேன். அடுத்தடுத்து வரும் உத்ஸவாநுபவங்களைத் தவிர்த்துக்கொள்ள முடியாமல் காலங் கடத்திவருகிறேன். அனேகமாய் இவ் வானி மாதத்திற்குள் சிகித்ஸை நடைபெறலாம். சிகித்ஸை முடிந்துவிட்டதாகப் பலர் எண்ணிக் கடிதங்கள் எழுதிவருவதால் இங்கு இது தெரிவிக்கவேண்டியதாயிற்று. இது நிற்க.

புநர்வஸு பத்ரிகை நியதமாக வெளிவந்துகொண்டிருப்பதாகத் தெரியவில்லை. அது கிடைக்குங்காலங்களில் அதனைப்பிரித்துப் பார்க்கவேணுமென்கிற அபிருசியும் நமக்கு உண்டானதில்லை. சென்ற மாதத்தில் கிடைத்த புநர்வஸுவை நாம் பிரிக்கவுமில்லை. யாரைக்கொண்டாவது வாசிக்கச்செய்து கேட்க வேணுமென்னும் விருப்பமும் விளையவில்லை. ஆனால் அதைவாசித்துப்பார்த்த ஸஹ்ருதய ஸுஹ்ருந்மணிகள் பலர் கடிதங்கள் மூலமாகவும் நேரிலும் "புனர்வஸுவில் இப்போது வெளிவந்திருக்கும் அபத்தக்களஞ்சியத்தை உபேக்ஷிக்கவே கூடாது" என்று வற்புறுத்தினபடியால் இந்த நூலெழுதலாயிற்று. எனது வாழ்நாளில் பல நூற்றுக்கணக்கான துர்வாதச்சுவடிகளுக்கு மறுப்பு நூல்களை யெழுத நேர்ந்ததென்பதை உலகமறியும். இந்த நூல் மிக்க வருத்தத்துடனே யெழுதலாயிற்று. ஏன்? இவ்வளவு அஸப்யமான சொற்களையும் பொருள்களையுங்கொண்ட சுவடி இதுகாறும் நமது மறுப்புக்கு இலக்காகவில்லை.

ஆசாரியர்களின் ஸ்ரீஸூக்திகளை மறுக்கும்போது, அந்த ஸ்ரீஸூக்திகளைப் பலரு மறிய எடுத்துக்காட்டி "இதில் இன்னவிதமான அநுபபத்தியுள்ளது" என்று விளக்கிக்காட்டி யிருக்கவேணும். ஒரு ஸ்ரீஸூக்தியையும் உதாஹரியாமல் தாம் க்ரஹித்த அபார்த்தத்தையே காட்டி 'அது தப்பு, இது தவறு, இது கல்பனை' என்று எழுதிவைத்திருக்கின்ற இவருடைய கட்டுரையினுல் ஒரு நபராவது த்ருப்தியோ மகிழ்ச்சியோ அடைய முடியுமா? "இக்காலத்திலுள்ள திருப்பாவை ப்ரவசநகர்த்தாக்கள் மிகுந்த குழப்பத்தை உண்டுபண்ணிவிட்டார்கள்" என்றும் "ஒரு திருப்பம் ஏற்பட்டுத் தானுகவேண்டும்" என்றும் கைகூசாமல் எழுதுகிருரிவர். இதைப்பற்றி நூலினுள்ளே மிகமிக எழுதியுள்ளேன். மிக்க குழப்பம் ஏற்பட்டுவிட்டதாக எழுதுகின்ற விவர் சில பெரியார்களை யடிபணிந்து அக்குழப்பத்தைத் தீர்த்துக்கொள்ளத்தடையென்னே? நாம் எழுபத்திரண்டு ஆண்டுகட்கு முன்பு வாசித்த மாக காவியத்தில் [சிசுபாலவத மஹாகாவ்யே] ஒரு சுலோகத்தை இன்று நினைக்கிறேம்;

"ஏதஸ்மிந் அதிகபயச்ச்ரியம் வஹந்த்ய: ஸம்க்ஷோபம் பவநபுவா ஜவேந நீதா',
வால்மீகேரரஹிதராம லக்ஷ்மணுநாம் ஸாதர்ம்யம் தததி கிராம் மஹாஸரஸ்ய:."

என்பது. ரைவதககிரிவர்ணனத்திலுள்ள சுலோகமிது. அங்குள்ள பெரிய தடாகங்களுக்கு வால்மீகிராமாயணத்தோடு ஸாம்யம் பேசுகிருரிதில். [ஸபங்கச்லேஷமும் அபங்கச்லேஷமும் உள்ளது இதில்.] இதிலிருந்து ஒரே விஷயம் இங்குக் கொள்ளுகிறேம், [ஸம்க்ஷோபம் பவநபுவா ஜவேந நீதா:] தடாகங்களுக்கும் குழப்பம் உண்டானதாகவும், வால்மீகிராமாயணத்துக்கும் குழப்பம் உண்டானதாகவும் இதில் கூறப்படுகிறது. தடாக பக்ஷத்தில் 'பவநபுவா' என்பது விசேஷணம். ராமாயண பக்ஷத்தில் அது விசேஷ்யம். தடாகங்கள் காற்றின் வேகத்தினுல் குழப்பமடைந்ததாகவும், ஸ்ரீ ராமாயணம் பவநதநயனுன ஹநுமானுல் குழப்பமடைந்ததாகவும் இங்குக் கூறப்பட்டுள்ளது. ஸ்ரீ ராமாயணத்திற்கு ஹநுமானுல் ஏற்பட்ட குழப்பம் ஸுந்தரகாண்ட யுத்தகாண்டங்களில் காணப்படுகிறது. தடாகங்களுக்குக் குழப்பமேற்படுவது ஸஹஜம். ஸ்ரீராமாயணத்திற்கு ஹநுமானுல் (ஸம்க்ஷோபம்) குழப்பம் ஏற்பட்டதென்றுல் அது பரிஹாரஸாபேக்ஷமானதன்று. இவருடைய குழப்பம் அப்படிப்பட்டதாகத் தெரியவில்லை. இவர் தமது குழப்பத்திற்குப் பரிஹாரம் பெறவேண்டியது மிக அவசியம். அதை இவர் விரைவில் பெறுக வேண்டும். "ஸமீப காலங்களில்..........குழப்பத்தை உண்டுபண்ணிவிட்டார்கள்" என்றிவர் எழுதியுள்ளார். நமது இந்நூலில் ஜேம்ஷெட்பூர் ராமரத்னமையங்காருடைய வாசகங்களும் மாயவரம் மஹாதனிகருடைய கதையொன்றும் தெரிவிக்கப்பட்டுள்ளன. ரா. ஐயங்கார் இவருடைய திருப்பாவை உபந்யாஸத்தைக் கேட்டு மிக்க குழப்பமடைந்தே பலரிடம் பேசிக்கொண்டிருந்தார். மாயவரம் தனிகர்க்குண்டான குழப்பத்தை அவருடைய கதையினுல் அறிந்திருக்கிறீர்கள். நம் ப்ரஹ்மஸ்ரீக்குண்டான குழப்பம் எத்தகையதோ? இஃதொன்றையே நாம் அறிய விரும்புகிறேம்.

அக்னிஹோத்ர – கண்டகோத்தாரம் முற்றுப்பெற்றது.

# நமது பழைய கட்டுரை ஒன்றின் அனுவாதம்

(இதே புனர்வஸு பத்ரிகையில் (காலஞ்சென்ற D.T. தாதாசாரியாரின் கட்டுரைக்கு நாம் எழுதியிருந்த மறுப்பின் மறுபதிப்பு)

மயிலையில் நின்றும் நெடுநாளாக வெளிவரும் புனர்வஸுபத்ரிகையின் நெ. 153 ல் ஒரு பண்டிதர் "திருப்பாவை—சுடர் (க்) கொடியின் சொல்லமுதம்" என மகுடமிட்டு எழுதிவருகையில் (4. ஆழி) என்றிட்டு எழுதியிருப்பதாவது—இப் பாட்டில் கோபிகள் மார்கழிநீராட மழை பெய்யுமாறு மேகதேவதையைப் பிரார்த்திக்கின்றார்கள்; இப்போது ஆறுகளும் குளங்களும் வறண்டுகிடக்கின்றனவா என்ன இவர்கள் நீராடத் தண்ணீரே இல்லையா என்ன? இனிமேல் மழைபெய்து தானா ஆகவேண்டும்? இப்போது இவர்கள் ஜலாசயங்களில் ஜலக்ரீடை பண்ணுமலா இருக்கிறார்கள்? தண்ணீரே இல்லாமலிருந்தால் முதற்பாட்டில் "நீராடப் போதுவீர்! போதுமினோ" என்றழைத்து நீராடப்புறப்பட்டிருக்க மாட்டார்களன்றோ? இன்றைக்கு இந்த விரதத்தை யனுஷ்டிக்க ஏற்பாடு செய்திருக்கவோ, வீட்டை விட்டுக் கிளம்பித் தோழிகளையழைக்கவோ மாட்டார்களன்றோ? இப்போது நீராட்டத்திற்குரிய ஜலஸௌகர்யம் பூர்ணமாகவேயிருக்கின்றது; ஆகவே இப்போது ஜலத்திற்கு அபேக்ஷையே கிடையாது. எப்படியும் இப்போது நீராட்டம் நடந்தே விடும். அடுத்த வருடத்திற்காகத்தான் இப்போது பெய்யும்படி வேண்டுகிறார்கள்; இதனால் பலபேர்களுக்குண்டான ஸந்தேஹம் தீர்க்கப்பட்டு விட்டது—என்று. இத்தகைய அரும்பெரும்பொருளைக்கண்டறிந்து வரைந்தது விலக்ஷணமேதாவிலாஸமே. "இதனால் பலபேர்களுக்குண்டான ஸந்தேஹம் தீர்க்கப்பட்டு விட்டது" என்று பண்டிதர் தலைக்கட்டினதுண்டே, இதுதான் பரமரஸம். ஏரிகளும் குளங்களும் நதிகளும் நீர்நிரம்பியிருக்க கோபிகள் மழைபெய்திடாய், என்று வேண்டுவது பொருத்தமாக இல்லையே யென்று பல நிரூபகர்கள் ஸந்தேஹங்கொண்டிருந்தார்களாம்; இந்த வேண்டுகோள் இந்த வருஷத்திற்காகவன்று, மேல் வருஷத்திற்காகவே யென்று தாம் கண்டறிந்து துணிந்து வெளியிட்டதனால் ஸந்தேஹம் தீர்ந்து விட்டதாம். ப்ரஜ்ஞையும் ப்ரதிபையும் மிக வியக்கத்தக்கது.

— ஸ்வாத்மாநுஸந்தாலேகனவைகரீ ஸமுத்போதனம் —

இதைச்சிறிது மாற்றியெழுதியிருக்கலாமென்று தோன்றியது. எங்ஙனே யென்னில்; வர்ஷருதுவின் மாதங்கள் ஆவணியும் புரட்டாசியுமேயொழிய மார்கழி யன்று. "தபச் ச தபஸ்யச் ச வார்ஷிகாவ்ருதூ" என்று வேதமுமோதிற்று. மார்கழி மாதம் ஹேமந்த காலமேயொழிய வர்ஷாகாலமன்று; இதற்கு முந்தின சரத்ருது விலுங்கூட மேகம் வர்ஷியாதென்பதை "கர்ஜதி சரதி ந வர்ஷதி வர்ஷதி வர்ஷாஸு நிஸ்ஸ்வநோ மேக:" என்பதனால் பண்டிதராஜன் பகர்ந்தான். "தர்சயந்தி சரந்நத்ய: புலிநானி சனைச் சனை:" என்று வான்மீகி முனிவரும் சொல்லிவைத்தார். ஆக இந்த ஹேமந்த காலத்தில் மழைபெய்யப் பிரார்த்திப்பது அஸங்கதமாகையாலே இந்தப் பாசுரம் அவதரித்ததே ஸமஞ்ஜஸமாகத் தோன்றவில்லை—என்றெழுதியிருக்கலாம். அதவா, மற்றொரு படியாகவும் எழுதியிருக்கலாம்; * நீராடப் போதுவீர் போதுமினோ * என்றழைத்தவர்கள் எல்லாருமாகக்கூடி ஒரு பொய்கைக்கோ யமுனைக்கோ போய்ச்சேரவேண்டியிருக்க அது செய்யாதே நந்தகோபனுடைய கோயில் காப்

பாளை யெழுப்புவதும் நந்தகோபயசோதாதிகளை யெழுப்புவதுமாய் பொய்கைக் கரையின் பேச்சேய்ல்லாமல் பிரபந்தத்தை முடித்துவிட்டபடியாலே இது விப்ரலம்பக வாக்யமாயிருந்ததென்று கூசாமல் எழுதியிருக்கலாம். எதையெழுதினாலும் காகிதம் தாங்குமன்றோ! 'இவை சில அபூர்வார்த்தங்கள்' என்று உகந்து வாசிக்கவும் வியக்கவும் அதிகாரிகளு முள்ளார்களன்றோ

## — புள்ளுஞ்சிலம்பினவில் மற்றோரதிசயமும் கேளீர் —

"6. புள்ளும்" என்றிட்டு (மேலே குறித்த புனர்வஸுவில் பக்கம் 24 ல்) முன்னம் குறித்த பண்டிதர் தாம் எழுதியிருப்பதாவது. பாவைக்களம் செல்வதற்குப் புறப்பட்டவர்கள் இந்த கோஷ்டியில் இன்னமும் வந்து சேராதவர்களை யெழுப்புவதாக அமைந்திருக்கிற பத்துப் பாசுரங்களுக்கு அவதாரிகையிடுகிறார் இப்பண்டிதர்—தூக்கம் விழித்தெழுந்து வராதவர்களும் வரட்டும்; அவர்களுக்காகக் கொஞ்சம் பொறுப்போம் என்று ஒருத்தி சொன்னாளாம். அவர்களுக்காக நாம் ஏன் காத்திருக்க வேண்டும்? நாமெல்லோரும் காலத்தில் எழுந்து வந்துவிடவில்லையா? இதைப்போல் அவர்களும் வந்திருக்க வேண்டாமா? 'வீணாக மற்றவர்கள் காத்திருப்பார்களே! என்று எண்ணமில்லாதவர்களைப்பற்றி நமக்கு ஏன் கவலை? என்று' மற்றொருத்தி சொன்னாளாம். அதற்குமேல் அவள் மீண்டும் சொன்னாளாம்—'அப்படியன்று அம்மா! ஒரு காரியத்திலும் நாம் அவசரப்படக்கூடாது; பரவசமாகத் தூங்கிக் கொண்டிருப்பர்களோ யொழிய வேணுமென்று வராமலிருப்பர்கள்? தூக்கமென்பது பொல்லாததன்றோ? என் செய்வர்கள் பாவம்! விழித்துக் கொண்டபின் பரிதாபப்படாமலா இருப்பர்கள்! என்று சாந்தமாகவும் ஸாமர்த்தியமாகவும் கூறினாளாம். இப்படிப் பட்ட அம்மையார்புராணங்களை அநுபவிக்கவும் வெள்கி நிற்க வேண்டியிருந்தும் இன்சுவைமிக்க தத்துவங்களை யுணர்த்தவேண்டி அநுவதித்தோமித்தனை. இவ் விஷயங்களெல்லாவற்றிலும் தத்துவப் பொருள்களை க்ரமேண கேளீர்.

## — மார்கழி நீராட்டத்தின் மருமமுணர்த்துதல் —

திருப்பாவையில் முதற்பாட்டில் * நீராடப்போதுவீர் போதுமினோ * என்றும், மூன்றாம்பாட்டில் * நாங்கள் நம்பாவைக்குச் சாற்றி நீராடினால் * என்றும் நாலாம்பாட்டில் * நாங்களும் மார்கழி நீராட மகிழ்ந்து * என்றும், இருபதாம்பாட்டில் * நப்பின்னைநங்காய்! இப்போதே யெம்மை நீராட்டு * என்றும், இருபத்தாறும் பாட்டில் * மார்கழி நீராடுவான் * என்றும் இங்ஙனே பலகால் நீராட்ட ப்ரஸ்தாவம் நிகழ்ந்துள்ளது. மார்கழி நீராட்டமஹோத்ஸவமென்று ஆங்காங்கு உத்ஸவமும் நடத்தப்பட்டு வருகின்றது ஆண்டாள் திருவவதாரஸ்தலமான ஸ்ரீ வில்லிபுத்தூரில் ஆண்டாளை நீர்நிலையருகில் எழுந்தருளச்செய்து நடத்தப்படுகிறது. ஆனால் திருப்பாவையில் * நீராடப்போதுவீர் போதுமினோ * என்றழைத்தவர்கள் நீராடுமிடமான நீர்நிலைக்குச் செல்லவில்லையே; தாங்கள் நீராடினதாகவும் சொல்லவில்லையே; இதன் மருமமென்ன? என்று தெரிந்துகொள்ளவேண்டும். நாலாம் பாட்டில் * ஆழிமழைக் கண்ணா வென்று மழைத்தெய்வமான மேகத்தை விளித்து * நாங்களும் மகிழ்ந்து மார்கழி நீராட உலகினிற் பெய்திடாயென்று நியமித்திருப்பதை நோக்குங்கால் மெய்யாகவே நீரிலே தோய்வதை உத்தேசித்திருப்பதாக ஸ்பஷ்டமாகிறதே; மேலே

அந்த அனுட்டானம் செய்ததாகத் தெரியவில்லையே யென்று சங்கிப்பதற்கு ஆஸ்பத முள்ளதுதானே.

— முன்னோர்மொழிந்த முறைகாட்டுதல் —

பூர்வாசார்ய வியாக்கியானங்களில் இந்த சங்கை பரிஹாரமடையும் படியாக அருளிச் செய்யப்பட்டுள்ளது. *நீராடப் போதுவீர்!* என்றவிடத்து மூவாயிரப்படியில் பெரியவாச்சான்பிள்ளையின் ஸ்ரீஸூக்தி வருமாறு—"[நீராட] இத்தால் இவர்கள் நினைக்கிறது க்ருஷ்ண ஸம்ச்லேஷம். தமிழரும் கலவியைச் சுனையாட லென்றார்கள். *ஏஷ ப்ரஹ்ம ப்ரவிஷ்டோஸ்மி க்ரீஷ்மே சீதமிவ ஹ்ரதம்" என்று பகவத் ஸம்ச்லேஷத்துக்கு க்ரீஷ்மகாலத்தில் குளிர்ந்த மடுவில்படிவதை த்ருஷ்டாந்தமாகச் சொல்லிற்றிறே" என்று. ஆறாயிரப்படி ஸ்ரீஸூக்தியும் காணீர்; "[நீராட] இவர்கள் தங்களுக்கு நீரா வென்று நோயாசையிறே. யமுனா ஜலம் ஒருத்தியுடைய விரஹாக்நியாலே சுவறுமே தமிழர் கலவியைச் சுனையாடலென்றாய்த்துச் சொல்லுவது. க்ருஷ்ணஸம்ச்லேஷத்தையாய்த்து இவர்கள் நீராட வென்கிறது. *ஏஷ ப்ரஹ்ம ப்ரவிஷ்டோஸ்மி க்ரீஷ்மே சீதமிவ ஹ்ரதம்* என்னுமாபோலே" என்று. ஆக இவற்றால், பகவானிடத்தில் அவகாஹிப்பதுதான் நீராட்டமாக மறைத்துச் சொல்லப்பட்டதென்று விளங்கும்.

— எம்பெருமானே உண்மையான தடாகமென நிரூபிக்கும் விருந்து —

முகுந்தமாலையில் *கரசரணஸரோஜே காந்திமந்நேத்ரமீநே ச்ரமமுஷி புஜவீசிவ்யாகுலே அகாதமார்க்கே, ஹரிஸரஸி விகாஹ்யாபீய தேஜோஜலௌகம் பவமருபரிகிந்ந: கேதமத்ய த்யஜாமி* என்கிற சுலோகத்தை நன்கு சிந்தனை செய்வது. நம்மாழ்வார் திருவாய்மொழியில் (8 5-1) *மாயக்கூத்தா...கண்ணா! கண்கைகால் தூய செய்ய மலர்களா சோதிச் செவ்வாய் முகிழதா, சாயல் சாமத்திருமேனி தண்பாசடையா, தாமரைநீள் வாசத்தடம்போல் வருவானே!* என்றும் *வல்லரக்கர் புக்கழுந்தத் தயரதன் பெற்ற மரதகமணித் தடம்* என்றும் எம்பெருமானைத் தடாகமாகவே பேசினார். ஸ்ரீரங்கராஜஸ்தவமருளிச் செய்துகொண்டே (திருக்கோட்டியூரிலிருந்து) திருவரங்கம் பெரிய கோயிலில் புகுகின்ற பட்டர் ஐம்பதறுபது சுலோகங்களினால் திருக்காவேரியையும் திருச்சோலைகளையும் திருமதில்களையும் திருவீதிகளையும் திருமண்டபங்களையும் சந்திரபுஷ்கரிணி திருப்புன்னை முதலானவைகளையும் அநுபவித்து, ஸ்ரீரங்கநாதன் கர்ப்பக்ருஹத் திருமுன்பே வந்தவாறே *பிப நயந! புரஸ்தே ரங்கதுர்யாபிதாநம் ஸ்திதமிவ பரிபுல்லத் புண்டரீகம் தடாகம்* என்றும், *உத்புல்ல பங்கஜ தடாகமிவோபயாதி ஸ்ரீரங்கராஜமிஹ* என்றும் ஒரு தாமரைத் தடாகத்திலே படிவதாகப் பணித்தாரேயன்றி ஸ்ரீரங்கநாதனை ஸேவிக்கின்றேனென்றாரல்லர். ஆகவே திருப்பாவையில் நீராட்ட ப்ரஸ்தாவம் நிகழ்ந்ததானது பகவதவகாஹனத்தையே சொன்னபடியாம். இதுமட்டுமன்று; [திருவிருத்தத்தில்] *சாலை நன் ஞானத்துறை படிந்தாடிக் கண் போது செய்து* என்றருளிச்செய்தபடியே ஞானத்துறையாகிய ஆசாரியர்களிடத்துப் படிந்து குடைந்தாடுவதையும் சொன்னபடியாகும். இதற்குச் சேருமாறு ஸ்வாபதேசார்த்தங்களை விளக்குதற்குப் பாங்காகவன்றோ (திருப்பாவையில்) ஸ்ரீஸூக்தி

கள் தொடையுண்டு திகழ்கின்றன. இந்த விளக்கத்தை அடியேனுடைய திருப்பாவையுரைகள் பலவற்றிலும் ரஸிகர்கள் அநுபவிக்கலாம். அநுபவித்துப் பிரவசனம் செய்து வருகிறார்கள். நமது அறிவுரைகள் உலகம் பரந்தவை.

— ஐயங்கார் பாசுரமொன்று காட்டும் தெளிவு —

பிள்ளைப் பெருமாளையங்கார் நூற்றெட்டுத் திருப்பதிகளுக்கும் நூற்றெட்டு வெண்பாக்களிட்டு நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி யென்னும் பிரபந்தம் பாடியுள்ளார். அதில் திருநாங்கூர்த் திருப்பதிகள் பதினொன்றில் ஒன்றான திருவெள்ளக் குளத்திற்கு இட்ட வெண்பா வருமாறு;—

"நானடிமை செய்யவிடாய் நாரணனை னெம்பெருமான்*
தானடிமை கொள்ளவிடாய் தானுனன்* —ஆனதற்பின்
வெள்ளக்குளத்தே விடாயிருவரும் தணிந்தோம்*
உள்ளாக் குளத்தேனை யொத்து."

(இப்பாட்டின் கருத்துச் சுருக்கம்.) எம்பெருமானுக்கு அடிமை செய்யவேணுமென்கிற விடாய் நமக்கிருப்பதுபோல, நம்மை அடிமைகொள்ள வேணுமென்னும் விடாய் அவனுக்குமுள்ளது. இருவருடைய விடாயும் தீரவேணும். என்னபண்ணினால் விடாய் தீரும்? குளத்திலே படிந்தால் தீரும். சேலும் கயலும் சேறும் பாசியும் மலிந்த குளத்திலே படிந்து தீரும் விடாயன்று இது. இந்த விடாய் தீருகைக்குத் திருவெள்ளக் குளமென்று ஒரு விலக்ஷணமான குளமுண்டாயிற்று. இதிலே அவன் நித்ய ஸந்நிதி பண்ணி ஸம்ஸாரிகளை அடிமைகொண்டு தன் விடாய் தீரப்பெறுகிறான். நாமும் இங்கே அடிமைசெய்து நம்விடாய் தீரப்பெறுகிறோம். திருவெள்ளக்குளமென்று ஊர்க்கும் பெயர், பெருமாளுக்கும் பெயர். அத்தலத்தில் விளங்கும் திருக்குளத்திற்கும் திருநாமம். ஆக, ஹரிஸரஸி விகாஹனமே நீராட்டமென்றதாயிற்று. (இந்த வெண்பாவில் ஈற்றடியில் குளம் என்றது—சர்க்கரைப்பாகுக்கு வாசகமான குடமென்கிற வடசொல் விகாரம்).

— பாகவதர்களைத் திருப்பள்ளி யுணர்த்துவதற்கு ஹேதுக்கள் ஐந்து —

*நீளாதுங்கஸ்தநகிரிதடீஸுப்தமுத்போத்ய க்ருஷ்ணம்* என்ற தனியனுக்குச் சேர *நப்பின்னை கொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர் மார்பனை கண்ணபிரானைப் பள்ளியுணர்த்துவதையே பிரதானமாகக் கொண்ட இத்திருப்பாவையில் ஆறுவது பாசுரந் தொடங்கிப் பதினைந்தாம் பாசுரமளவும் பத்துப் பாசுரங்கள் பாகவதர்களைப் பள்ளியுணர்த்துவன. 1. "ஏக: ஸ்வாது ந புஞ்ஜீத புஞ்ஜீத தசபிஸ் ஸஹ" என்று சாஸ்த்ரம் பரம போக்யமான வஸ்துவை ஒருவனாக அநுபவிக்க லாகாதென்றும் பத்துப்பேரோடு கூடியே அநுபவிக்கவேணு மென்றும் சொல்லியிருக்கையாலே பெருங்கூட்டமாகக் கூடி யநுபவிக்கப் பாரிக்கின்றனரென்பது முதல் ஹேது.

பரத்வமென்னும் ஒரு திருக்குணம்மாத்திரமே விளங்குமிடமான பரமபத நாதனை யநுபவிக்கப் பலகோடி நூறாயிரவர் திரளும்போது ஸகலதிருக்குணங்க

ளும் ஒருங்கே விளங்கு மிவ்விடத்தே அநுபோக்தாக்கள் அதனிலும் விஞ்சியிருக்க வேண்டாவோ என்கிற ஆவலுமுள்ளமை இரண்டாவது ஹேது.

பெரு வெள்ளத்திலே இழியுமவர்கள் பெருந்திரளாக இழியுமா போலே "ஆழியானென்னு மாழமோழையில்" என்ற பெரியாழ்வா ரருளிச்செயலின்படி அகாத ப்ரவாஹமான இவ்விஷயத்தில் பெருந்திரள் மிக அவசியமென்றும் கருதி னூர்கள்; * காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும் * என்னும்படியான விஷயத்தில் பலர் கூடியிருப்பது தைர்ய ஹேதுவாகு மன்றே. இது மூன்றுவது ஹேது.

நம்மாழ்வார் திருவாய்மொழியில் "அடியார்கள் குழாங்களை உடன் கூடுவதென்று கொலோ" என்று பாகவத கோஷ்டியில் சேரப் பெறுகையையே புருஷார்த்தமாகக்கூறி, முடிவிலும் "வந்தவ ரெதிர் கொள்ள மாமணி மண்டபத்து, அந்தமில் பேரின்பத்து அடியரோடிருந்தமை" என்று அப்பேறுதன்னையே பெற்ற தாகக் கூறியிருக்கையாலே பகவதநுபவத்திற் காட்டிலும் பாகவத கோஷ்டியில் அந்வயமே பரமபுருஷார்த்தமாகத் தேறுதலால் இங்ஙனேயொரு பத்துப்பாட்டுகள் அமைத்து அதனை வெளியிட விரும்பினது நான்காம் ஹேது.

இங்கு மிக முக்கியமாகக் கருதத்தக்க தொன்றுண்டு; அதாவது —விபீஷணாழ்வான் பெருமாளிடத்தே ஆச்ரயிக்க வரும்போது கட்டும்காவலு மொன்று மின்றிக்கேயிருக்க நேராகப் பெருமாள் திருவடிகளிலே வந்து பணிய லர்மாயிருக்கவும் அது செய்யாதே "வேதம் வல்லார்களைக் கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்து" என்கிற சாஸ்த்ரார்த்தத்தை நிறைவேற்ற வேண்டி வானர முதலிகளை முன்னிட்டாப்போலே இவர்களும் பாகவதோத்தமர் களை முன்னிட்டுக் கொண்டு சாஸ்த்ரார்த்த பரிபாலனம் பண்ணுகிறார்கள்.

— எழுப்பப்படுமவர்கள் உறங்குபவர்களல்லர் —

பகவதநுபவத்தில் அபிநிவேசம் எல்லார்க்கு மொத்திருக்கும் போது சிலர் உள்ளே கிடந்துறங்குவதாகவும், சிலர் வெளியே உலாவி உணர்த்துவ தாகவும் பாசுரமிட்டால் இது பொருந்துமோ? உள்ளே கிடந்துறங்குவார்க்கு அவா குறைவுபட்டதென்றும், வெளியே நின்று உணர்த்துவார்க்கு அவா அதிகமென்றும் தேறுமே; இவ்விதமான ஏற்றத்தாழ்வு பாகவதர்களுக்குள் இருக்கத் தகாதே! என்னில்; கேண்மின்; கண்ணபிரானுடைய திருக்குணங்களும் திவ்ய சேஷ்டிதங்களும் ராமசரங்கள் போலே சிலரை மயங்கப்பண்ணும், சிலரைத் துடிக்கப் பண்ணும் உள்ளே கிடப்பவர்கள் மயங்கினவர்களின் கோஷ்டியில் சேர்ந்தவர்கள், வெளியே எழுப்புமவர்கள் துடிப்பவர்களின் கோஷ்டியில் சேர்ந்தவர்கள், ஆகவே அனைவரும் பகவத்குணாநுபவத்திலீடுபட்டவர்களே யென்னத் தட்டில்லை.

— நாமுரைக்கும் உள்ளுறைபொருள்களுக்கு ஓர் எடுத்துக்காட்டு விருந்து —

22. [தாயைக் குடல்விளக்கஞ் செய்த தாமோதரனை] தாயாவது காயத்ரி "காயத்ரீம் சந்தஸாம் மாதா" என்று வேதத்தில் காயத்ரியைச் சந்தஸ்ஸுக்களுக்கு மாதாவாகச் சொல்லியிருக்கையாலே இங்குத் தாய் என்றது காயத்ரியை; அதைக் குடல்விளக்கஞ் செய்கையாவது குடலென்பது நடுவான பாகம். காயத்ரியில் நடுப் பாகமாவது "பர்கோ தேவஸ்ய தீமஹி" என்பது, இதுதானே அதில் உயிரான

பாகம். இதை விளக்கம் செய்வதாவது ப்ரஹ்மவர்ச்சஸ்ஸு அதிகரிக்கச்செய்கை இனி, திருமங்கையாழ்வார் * குலந்தரும் செல்வம் தந்திடு மென்ற பாசுரத்திலே "பெற்றதாயினுமாயினசெய்யும்" என்றருளிச்செய்திருக்கையாலே திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரத்தையும் தாயாகக் கொள்ளலாம். கண்ணபிரானுக்கு தேவகிப் பிராட்டி ஒரு தாய்; யசோதைப்பிராட்டி மற்றொரு தாய்; தேவகியைக் காட்டிலும் யசோதையே சிறந்த தாயெனக் கொண்டாடப் படுகிறாள். அதுபோல ஸ்ரீவைஷ்ணவ ஸந்தானத்திலும் காயத்ரியைக் காட்டிலும் திருவஷ்டாக்ஷரியே மிகச் சிறந்ததாகக் குலாவப்படுகிறது. ஆசார்யஹ்ருதயத்தில் "ச்சந்தஸாம்மாதாவாலும் அதுக்குத் தாயாய்த் தாயினுமாயின செய்யுமத்தாலும் பிறப்பிக்குமது இருவர்க்கும் ச்ரேஷ்ட ஜன்மம்" என்ற சூர்ணிகை இங்கே அநுஸந்தேயம். திருவஷ்டாக்ஷர மஹா மந்திரத்திற்கு [குடல்] நடுப்பாகமாவது. நமஸ்ஸு அதை விளக்கம் செய்பவர் ஆசார்யர். ஸ்வரூப விரோதி உபாயவிரோதி ப்ராப்யவிரோதி என்ற மூவகை விரோதிகளையும் கழிப்பதன்றோ நமஸ்ஸு; ஸ்வரூபாம்சத்திலும் உபாயாம்சத்திலும் உபேயாம்சத்திலும் தாங்கள் உஜ்ஜ்வலர்களா யிருந்து தம்மர்களையும் உஜ்ஜ்வலர் களாக்குமவர் தாயை குடல்விளக்கம் செய்பவர் என்றதாயிற்று. [தாமோதரன்] தாம்பினால் கட்டுண்டவனென்பது கருத்து. கண்ணன் தாம்பினால் கட்டுண்டது தன்னுடைய இச்சையினாலத்தனை யொழிய கருமம் காரணமாகவன்று. அவ்வளவேயுமல்லாமல் அந்த தாமபந்தம் அவனுக்கு தேஜஸ்கரமாயும் நின்றது. அதுபோலவே ஆசாரியர்களும் இந்நிலவுலகில் பத்தஸம்ஸாரிகளிலே ஒரு கோவையாய் பந்தத்திற்கு உட்பட்டிருந்தது கருமத்தினாலன்றிககே பகவதிச்சையினாலாயது அதுதானே அவர்களுக்கு தேஜஸ்கரமாயும் நின்றது. ஆக இத்தன்மையைப்பற்றி ஆசார்யனைத் தாமோதரனென்னத் தட்டில்லை. இங்ஙனமே கண்டு கொள்க.

## — ஆழிமழைக்கண்ணாவின் அந்தரங்கப்பொருள் விருந்து —

பகவத்விஷயத்தில் அவகாஹிப்பதும் ஞானத்துறைபடிந்தாடுவதுமே நீராடவென்றதின் கருத்தாயின் ஆழிமழைக்கண்ணாவென்று மேகதேவதையை விளித்து மழைபெய்ய நியமிப்பானேன்? என்று கேள்வியெழும். நீராட வென்றதன் அந்தரங்கப்பொருளை உணர்த்தியதுபோல மழைபெய்ய நியமித்த இதன் அந்தரங்கப் பொருளை உணர்த்துகின்றேன் பூருவாசாரியர்களின் ஒரு ச்லோகம் கேளீர்;

' லக்ஷ்மீநாதாக்க்யஸிந்தௌ சடரிபுஜலத: ப்ராப்ய காருண்யநீரம்
நாதாத்ரௌ அப்யஷிஞ்சத் ததநு ரகுவராம்போஜசக்ஷுர்ஜ்ஜராப்யாம்,
கத்வா தாம் யாமுநாக்க்யாம் ஸரிதம், அத யதீந்த்ராக்க்யபத்மாகரேந்த்ரம்
ஸம்பூர்ய ப்ராணிஸஸ்யே ப்ரவஹதி ஸததம் தேசிகேந்த்ரப்ரமௌகை"

இதன்பொருளாவது —நம்மாழ்வாராகிற காளமேகம் ச்ரியப்பதியாகிற கடலிலே புக்குக். கருணையாகிற நீரை முகந்துகொண்டு ஸ்ரீமந் நாதமுனிகளாகிற மலையினுச்சியில் வர்ஷிக்க, அந்த மழை உய்யக்கொண்டார் மணக்கால் நம்பிகளாகிற இரண்டு அருவிகளாலே பெருகி யமுனைத்துறைவர் (ஆளவந்தார்) என்னும் ஆற்றில் தங்கி அங்கு நின்றும் பெருகி எம்பெருமானாராகிற ஏரியை நிறைத்து [வீராணத்தேரியின் தீர்த்தம் எழுபத்துநான்கு மதகுகள் வழியாகப் பெருகிப் பல ஊர்களிலே பாயுமாபோலே] எழுபத்துநான்கு ஸிம்ஹாஸனாதிபதிகளின் வழியாக் ஸம்ஸாரி சேதநர்கள் பக்கலிலே இடையறாது பெருகிக்கொண்டிருக்கின்ற தென்கை.

24 ஆக, நம்மாழ்வார்போன்றவொரு ஆசார்யரை ஆழிமழைக்கண்ணு வென்று விளித்து, 'லக்ஷ்மீ நாதஸமாரம்பாம்- குருபரம்பராம்' என்கிறபடிய கருணைக்கடலான எம்பெருமான் தொடங்கி நிகழ்கின்ற ஆசார்யபரம்பரையில் ப்ராப்தமான அர்த்தங்களை மேலெழக்கொள்ளாமல் உள்புக்கு முகந்துகொண்டு, திவ்யமங்கள விக்ரஹச்சாயையினால் தேவபிரானுடையக் கரிய கோலத்திருவுரு உள்ளேவிளங்கும்படியைக் காட்டிக்கொண்டு திருவாழியாழ்வானைப்போல் விரோதி நிரஸநஞ்செய்துகொண்டும், ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வானைப்போல் கம்பீரமான திருமிடற்றோசையைக் காட்டிக்கொண்டும் ஸ்ரீஸூக்திகளைத் தாராளமாகப் பெய்து எங்களை யுஜ்ஜீவிப்பித்தருள வேணுமென்கிற பிரார்த்தனையே அந்தரங்கப் பொருளென்னத் தட்டில்லை.

## — ஆசார்ய மேகஸாதர்ம்ய நிரூபண விருந்துகள் பத்து —

ஆழிமழைக்கண்ணுவென்று ஆசார்யச்ரேஷ்டரே விளிக்கப் படுகிறாரென்தற்குப் பொருத்தமாக மேகத்திற்கும் ஆசார்யர்க்கும் பத்து வகையான ஒப்புமைகள்.

(1) மேகமானது உப்புக்கடலிலுள்ள க்ஷாரமான ஜலத்தையும் தான் முகந்து மிக மதுரமாக்கிப் பெய்கின்றது அது போல் ஆசாரியர், நால்வேதக்கடலிலுள்ளனவாய் மந்தமதிகளுக்கு துரவகாஹங்களாய் அபோக்யங்களான அர்த்தங்களைத் தங்களுடைய திருநாவீறு கொண்டு போக்கியமாக்கி உபகரிப்பர்.

(2) மேகமானது "உயிரளிப்பான் மாகங்களெல்லாந் திரிந்து" (திருவிருத்தம் 32) என்றருளிச் செய்தபடியே லோகரக்ஷணார்த்தமாகப் பெய்யவேண்டுமிடங்களிற் சென்று பெய்வதுபோல, ஆசாரியர் 'எண்டிசையும் பேர்த் தகர நான்ருடையான் பேரோதிப் பேதைகாள்! தீர்த்தகரராமின் திரிந்து'' என்கிற பூதத்தாழ்வாருடைய நியமனப்படியே "ஸ்ரீரங்கம் கரிசைலமஞ்ஜநகிரிம் ... .......... ஸாலக்ராமகிரிம் நிஷேவ்ய ரமதே ராமாநுஜோயம் முநி." என்னும்படியாக ஸகல திவ்ய தேசங்களிலும் ஸகல க்ஷேத்ரங்களிலுமெழுந்தருளி ஆத்மோஜ்ஜீவநார்த்தமாக அர்த்தங்களைப்பொழிவர்.

(3) மேகமானது மழைபெய்து பள்ளமான விடங்களையும் நிரப்புவது போல ஆசாரியரும் ஸதுபதேச வ்ருஷ்டிகளைச் செய்து நீசர்களாயிருப்பவர்களை உத்துங்கர்களாக்குவர்.

(4) மேகமானது எப்போதும் வர்ஷியாது; காலவிசேஷங்களிலேயே வர்ஷிக்கும், இங்ஙனே ஆசாரியரும் சில சில ஸமயவிசேஷங்களைக் குறிக்கொண்டு ஸதுபதேசவர்ஷங்களைச் செய்வர்.

(5) மேகமானது ப்ராப்த காலங்களில் பெய்யாவிடில் உலகில் பலவகைப் பீடைகள் உண்டாகின்றன. அதுபோல் ஆசாரியரும் ஸமயங்களில் ஸதுபதேசங்களைச் செய்தருளாவிடில், தேஹாத்ம ப்ரமம் ஸ்வஸ்வாதந்த்ர்ய ப்ரமம் அந்ய சேஷத்வ ப்ரமம் ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயயோக்யதாப்ரமம், பாந்தவாபாஸ லோலத்வம், விஷய ஸங்கம் முதலான பல பீடைகள் தோன்றும் இவை ஆசார்யோபதேசத்தாலல்லது கழியமாட்டா.

மேகம் எவ்வளவு வர்ஷித்தாலும் த்ருப்தியடைவது மில்லை, கைம்மாறு கருதுவது மில்லை. அதுபோலவே ஆசாரியரும் கைம்மாறு கருதாமல் எவ்வளவு உபதேசித்தும் த்ருப்தியடையாமலே மேன்மேலு முபதேசித்துக் கொண்டேயிருப்பர்.

மேகம் சில காலங்களில் சில நீர்த்துளிகளைப் பெய்து ஓய்கிறது; மற்றொரு கால், போதும்போது மென்னும்படியாக அபரிமிதமாய் வர்ஷிக்கிறது. இங்ஙனமே ஆசாரியரும் சில ஸமயம் மந்த்ரோபதேசமென்று சிஷ்யர் செவியிலே சில அக்ஷரங்களைச் சொல்லி நிற்பர்; மற்றொருகால் [காலக்ஷேபக்ரந்த ப்ரவசனம் செய்யுமிடத்து] ச்ருதி ஸம்ருதீதிஹாஸ புராண உபய வேதாந்த ரஹஸ்ய ஸாரார்த்தங்களை அபரிமிதமாக வர்ஷித்து 'இது என்ன அதிவ்ருஷ்டி!' என்று வியப்புறச் செய்வர்.

மேகம் ஊஷரங்களிலே வர்ஷித்து நீரை நிஷ்ப்பலமாக்குகிறது; சிப்பிகளிற் பெய்து முத்துக்களை யுண்டாக்கி ரத்ந பூஷணங்களுக்கு உதவுகிறது. இப்படியே ஆசாரியரால் சில வ்யக்திகளிடத்தில் உபதேசிக்கப்படும் அர்த்தங்கள் அநவதானத்தினாலும் விஸ்மரணத்தினாலும் அப்ரயோஜன மாகின்றன. சில மேதாவிகள் பக்கலிலோ வென்னில் விசேஷமான புஷ்டியை யடைந்து ஸ்ரீவசந பூஷணம், உபதேச ரத்தினமாலை என்னும் பெயர்களால் ஆத்மாலங்கார ஹேதுக்களாகின்றன.

மேகம் பெய்த நீரானது நதிகளிலும் தடாகங்களிலும் கிணறுகளிலும் சென்று சேர்ந்து ஸர்வோபஜீவ்யமாகின்றது; வேறிடங்களிற் சேர்ந்து ஒருவர்க்கும் கொள்ளத்தகாததாக ஆகின்றது. அதுபோலவே ஆசார்யர் ஸத்பாத்ரங்களில் வர்ஷிக்கும் அர்த்த விசேஷங்கள் ஆசார்ய பரம்பரை யாய் க்ரஹித்து அநுபவிக்கத் தக்கதாயும், அபாத்ரங்களில் தந்த அர்த்தங்கள் பழுக்கக் காய்ச்சின இரும்பிலே விட்ட தண்ணீர்போல் அஸத் கல்பங்களாயும் ஆகின்றன.

மேகமானது "எத்தனையும் வான் மறந்த காலத்தும் பைங்கூழ்கள், மைத் தெழுந்த மாமுகிலே பார்த்திருக்கும்" (பெருமாள் திருமொழி) என்கிற படியே, பயிர், சாதகபக்ஷி முதலிய அநந்ய கதிகளால் எதிர்பார்க்கப் பட்டிருந்து அவற்றுக்கு உபகாரகமாயும், "நீர்காலத்து எருக்கிலம் பழ விலைபோல் வீழ்வேனை" (நாச்சியார் திருமொழி) என்கிறபடியே எருக்கஞ் செடிகளிற் பெய்து நஷ்டத்தை விளைப்பதாயும் ஆகிறது. அதுபோல, ஆசார்யதிவ்ய ஸூக்திகளும் அநந்யகதிகளால் குதூஹலத்தோடு எதிர் பார்க்கப்பட்டு உபயோகங்கொள்ளப்படுவனவாய், பிறரிடத்திலே பெருகி "சாறுவாகமத நீறுசெய்து சமணச்செடிக்கனல் கொளுத்தியே சாக்கியக் கடலை வற்றுவித்து மிகு சாங்கியக்கிரி முறித்திட" (ஆர்த்திப் பிரபந்தம்) என்கிறபடியே அநர்த்த ஹேதுக்களாய் முடியும். இங்ஙனே மற்றும் பல வகையான உவமைப்பொருத்தங்கள் காணலாம்.

இவ்வகையான சுவைப்பொருள்களையறிய இன்னொரு பிறவி பிறக்கவேணும்.

